ஆதீன வெளியீடு எண் 63



# திருப்பனந்தாள் தல புராணம்





இராஜகோபுரம்.



தருமபுர ஆதீனம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

குருபாதம்.

# திருப்பனந்தாள் தலபுராணம்

திருப்பனந்தாள்

ஸ்ரீமத் செஞ்சடைவேதிய தேசிகர் அவர்கள்

இயற்றியது.





இவ்வாலய தருமகர்த்தா

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்

திருவுளப்பாங்கின்படி




திருப்பனந்தாள்

ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி

தேவஸ்தானத்தில்

வெளியிடப்பெற்றது.

1944



சிவமயம்

## முகவுரை

திருப்பனந்தாள் என்பது சோணாட்டில் காவிரியின் வடபால் விளங்கும் சிவதலங்களுள் சிறந்ததொன்றாகும். திருத்தாடகையீச்சரம் என்று தேவாரத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இத்தல புராணம் இவ்வூரில் வாழ்ந்த ஸ்ரீ செஞ்சடைவேதியதேசிகரவர்களால் இயற்றப்பெற்றது. செய்யுணடை மிக எளியதாகக் காணப்படுகிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம் இவற்றின் சிறப்புக்களையும், பூசித்துப் பேறுபெற்றோர் செய்திகளையும் இந்நூலில் தெளிவாகக் காணலாம். இந்நூலின் ஏட்டுச்சுவடி யொன்று இந்நூலாசிரியரது பரம்பரையினரான திருமுறைவல்லுனர் திரு. S. அருணஜடேச தேசிகரவர்களிடமிருந்து கிடைக்கப்பெற்றது.

சைவசமய ஸ்தாபன பீடாதிபதியாய் தமது பெருநாளை சைவசமய வளர்ச்சிக்கும் தமிழ்ப் பெருந்தொண்டிற்கும் அளித்து வேதசிவாகம செந்தமிழ் வேதத்திருமுறைப் பாடசாலைகளை வளர்த்துச் சைவத்துக்கு ஓர் வித்தாய் சற்குருவாய் வீற்றிருக்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** தமது திருப்பணிகளில் நூல்வெளியீட்டினையும் ஓர் பகுதியாகக் கொண்டவர்களாதலின் இத்தமிழ் நூலையும் அச்சியற்றிப் பலர்க்கும் பயனடையச் செய்யவேண்டும் எனத் திருவுளம் பாலித்தார்கள். அவ்வாறே அவர்களுடைய ஆணையின்படி ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி ஆலயத்தில் பல பெருந் திருப்பணிகளும் நிறைவேறி 25—8—44 அன்று நடைபெறும் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேக காலத்தில் இந்நூல் வெளிவருகின்றது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் பெருங்கருணைச் செயலுக்குச் சைவ உலகம் எக்காலத்தும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையது.

உ

சிவமயம்

திருப்பனந்தாள்

ஸ்ரீ அருள்நிறைந்ததேசிக சுவாமிகள் சந்தான பரம்பரை

## ஸ்ரீமத் செஞ்சடைவேதிய தேசிகர்

இயற்றியது

### சிறப்புப்பாயிரம்

*அறுசீரடி ஆசிரிய விருத்தம்*

தாரணியி லுளசகல சாத்திரமுங்
கெடாதுலகிற் றங்கும் வண்ணங்
காரணியே டளித்துவளர் கவின்பனசைப்
புராணத்தைக் கணித்த மேலோன்
ஆரணியுஞ் சடைப்பரம னூர்கயிலைப்
பரம்பரையி னருள்சேர் நந்தி
சீரணியு மருள்பெற்ற செஞ்சடைவே
தியநாமத் தேசி கேந்திரன்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

# பொருளடக்கம்

# பிழைதிருத்தம்

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 2 | 4 | 3 | னென்னினைந்து | ளெனனினைந்து |
| 12 | 10 | 5 | அறலிணைக்கவிழ்க்க | அறலிணைக்கவிழ்க்க |
| 15 | 34 | 3 | கழறுருக் | கழறுறக் |
| 17 | 46 | 1 | நேற்பிறழு | நேர்பிறழு |
| 22 | 18 | 4 | திளைத்தாள் | திளைத்தான் |
| 28 | 47 | 3 | திருவழவானி | திருவிழவானி |
| 29 | 6 | 3 | வலைத்தனி நிறை | வளைத்தளி நிரை |
| ,, | 7 | 2 | பாடெழில் | பரட்டெழில் |
| 32 | 18 | ,, | நராப்தகனும் | நராந்தகனும் |
| 37 | 2 | 1 | மகபகதிப்பெயர் | மகபதிப்பெயர் |
| 37 | 2 | 4 | திடுந்தான் | திருந்தான் |
| 39 | 12 | 3 | முறைமயற்று | முறைமையற்று |
| 42 | 2 | 2 | மருவிடமரிய | மருவிடவரிய |
| 43 | 15 | 8 | யற்சி | யர்ச்சி |
| 47 | 34 | 1 | தாற்சனை | தார்ச்சனை |
| 48 | 36 | 2 | சாமங்களும் | சுரங்களும் |
| 49 | 43 | 7 | லைமயுநல்யோகம் | லமைத்தலையோகம் |
| 50 | 48 | 4 | சிதைந்தாடல் | சிதைந்தால் |
| 51 | 53 | 8 | தற்சனை | தர்ச்சனை |
| 56 | 4 | 8 | னகுன்று | னன்குறு |
| 61 | 12 | 3 | தோடியடைந்தனன் | தோடுமடைந்தனன் |
| 63 | 21 | 4 | வல்லவவ் | வவ்விய |
| 66 | 13 | 1 | அஞ்சடுக்கும்திபமுத் | அஞ்சடுக்குத்திபமுத |
| 74 | 3 | 3 | மகனெழிற் | மகளெழிற் |
| 75 | 9 | 1 | மொழியா யென்னப் | மொழிவாயென்னப் |
| 93 | 4 | 4 | வென்று | லென்று |
| 96 | 17 | 4 | திறுத்தனன் | திருந்தனன் |
| 98 | 10 | 3 | மகலாது | மகலாத |
| 99 | 1 | 1 | கறங்கன | கறங்கென |
| ,, | ,, | ,, | வாட்கை | வானில் |
| 100 | 7 | 5 | குன்றளித்தவள்தான் | குன்றளித்தவன்தாள் |
| 101 | 8 | 8 | டேகுதநீதி | டேகுதனீதி |
| 102 | 2 | 2 | நிசமொடற்சனை | நிசமொடர்ச்சனை |
| ,, | ,, | 3 | யியல்பாய் | வியல்பாய் |
| 104 | 17 | 1 | தற்பணங்தள் | தர்ப்பணங்கள் |
| 105 | 20 | 3 | பேரைந்தர்ருந் | பேரைந்தாருந் |
| ,, | 21 | 1 | பவுரணமை | பௌர்ணிமை |
| ,, | 22 | ,, | பவுரணமை | பௌர்ணிமை |
| 106 | 24 | 2 | வவையின் | மமையின் |
| 112 | 20 | 4 | னுட்பவென் | னுட்பமென் |



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
**24-வது மகாசந்நிதானம்**
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருப்பனந்தாள் தலபுராணம்

## காப்பு

### ஆண்டவிநாயகர்.

விருப்பனந்தா தியற்றமிழ்த்தென் மொழிக்கவிதைத்
திறம்முடிப்பான் விளங்கு செம்பொன்
பொருப்பனந்தா னருளவிபங் கடவுள்கிருத்
திமவடிவிற் பொலிந்து ளானைக்
கருப்பனந்தா ரஞ்சொரியுங் கழனிபுடை
சூழ்ந்திலங்குங் கவினுர் செல்வத்
திருப்பனந்தா ளிருப்பமைந்த ஆண்டவிநா
யகனையன்பிற் சிந்தை செய்வாம். 1

### சபாபதி.

ஒலித்திடும் பறையிற் றேூற்றமுந் திதியை
யுரககங் கணவலக் கரத்தும்
தொலைத்தலை யங்கி யதனிலும் மறைப்பைத்
தொந்தோமென் றூன்றிய பதத்தும்
தலத்துயர் முத்தி தாண்டவப் பதத்தும்
தங்கிட அம்பிகை காணப்
புலத்துயர் ஞான மன்றுண்ணின் றுடும்
புண்ணியன் திருவடி போற்றி. 2

### செஞ்சடைவேதியர்.

தார்பூத்த செழுங்கொன்றை யமுதநனி
யொழுகுமதி தரித்து நீண்ட
ஏர்பூத்த செஞ்சடைவே தியரையுயர்
பனசைமகிழ்ந் திருந்து ளாரை
வார்பூத்த பொம்மன்முலை வரையவளை
வளையவளை மாய னேத்தச்
சீர்பூத்த புகழிமவா னீர்வார்க்கப்
பெற்றவர்தாட் சிரமேற் கொள்வாம். 3

### இதுவுமது.

மஞ்சடைவே திகணீல விண்டொடச்சூழ்
திருப்பனந்தாள் மகிழ்ந்து ளானை
நெஞ்சடைவே தங்கெடுத்தா னெனநினைந்து
மான்முதலோர் நின்று வேண்ட
நஞ்சடைவே தனைத்தொலைத்து நாகநா
டளித்தருளு நம்பன் றன்னைச்
செஞ்சடைவே தியன்றன்னைத் திகம்பரனைப்
பரஞ்சுடரைச் சிந்தை செய்வாம். 4

### பெரிய நாயகியார்.

செய்வகை யறிவோ டிச்சைநற் றிரோதந்
திகழ்பரை யாகியெஞ் ஞான்று
மைவரைச் சேட்டித் தைந்தொழில் நடாத்தி
யாருயிர்க் குறுதிசெய் பவளை
மெய்வழா துணர்த்திப் பொய்வழா தகற்றி
விரிந்தபூ ரணத்தைமெய் யன்பர்
நைவுறு தளிக்கும் பனசைவாழ் பெரிய
நாயகி தனைப்பணிந் திடுவாம். 5

### இதுவுமது.

செம்பொனூ புரங்க ளரற்றுசீ றடியிற்
றெசமதி போலுகி ரொளியுந்
தும்பியின் புழைக்கை யூருவு மிடையுந்
துணைப்பொலன் வரையெனுந் தனமு
மம்புய முகமுங் கருங்குழ லினையு
மழகுறப் படைத்தபெண் ணரசைப்
பைம்பொனூர் பனசை வாழ்மட மாதைப்
பணிந்திமை யவர்க்கேவல் பணிப்பாம். 6

### அயிராவதப் பிள்ளையார்.

பிறவியம் பரவை கலக்கியா ணவமாம்
பெருங்கிரி பொடிபடத் தகர்த்து
பொறிபுலன் கரணப் படையினைத் துரத்திப்
புகுந்தடி யவர்கட மிதைய

மறுவறு கூடத் திருந்தறி விச்சை
மாதொழில் மதமிகப் பொழியுந்
திறமிகு மயிரா வதக்களிற் றடியைச்
சேவைசெய் தரும்பவம் சிதைப்பாம். 7

**சுப்பிரமணியர்.**

சந்துமான் மதத்தின் முருகுற நீபத்
தண்மலர்த் தேனுவட் டெடுத்து
நைந்திடா வருவி போற்குதித் திழிய
நண்ணுதன் புயப்பொலன் சிலம்பில்
அந்தமில் குறவர் மகண்முலை வேழ
மருதின மிவர்ந்துலாய்த் துவைக்க
மைந்துகொள் முருகன் றுண்மணிச் செம்பொன்
வயங்கிய வணிதலைக் கணிவாம். 8

**தட்சணாமூர்த்தி.**

வடநிழ லமர்ந்தெண் ணுன்குப நிடத
மறைகளா றங்கமா கமத்தின்
கடனிகர் துறைகள் போயமா தவர்க்குக்
கருதரும் பூரணப் பொருளின்
இடமுற மவுன முத்திரை தோன்ற
இருந்தருள் சச்சிதா னந்தந்
திடமுறக் காட்டி யுணர்த்திய ஞான
தேசிகன் திருவடி போற்றி. 9

**தாடகை.**

தருக்கியவெம் மனமுடைய சரோருகனுங் காணவொணுப்
பெருக்கிதழி மாமுடியைப் பேரன்பின் பெற்றியினுல்
நெருக்குமலர் மாலைகொடு நேயமொடு வளைவித்த
உருக்கமுடைத் தாடகையின் னுபயபதஞ் சிரத்தணிவாம். 10

**குங்குலியக்கலய நாயனுர்.**

கோணுக மணிந்தபிரான் கோடீரம் வளைந்ததென
நாணுற்றி யிழுத்திளைத்த நரேந்திரனுங் களிகூரக்
காணுத வன்பென்னுங் கயிற்றினுல் நிமிர்த்திட்டுச்
சேணுருந் தூபமிடுந் திருமறையோன் றுள்பணிவாம். 11

## திருநந்தி தேவர்.

வெள்ளியங் கிரியிற் றண்டுழாய்ப் படலை
விண்டயன் மகபதி முதலோர்
கள்ளுடைந் தொழுகு கொன்றைவே ணியனைக்
கண்டடி வணங்குவா னெருங்குந்
தள்ளருஞ் சபையிற் புகுந்தடித் தொதுக்குந்
தலைமையுஞ் சுரிகையோ டழகு
கொள்ளுநற் பிரம்பும் பெற்றநந் தீசர்
குரைகழற் ருளிணை பணிவாம். 12

## திருஞானசம்பந்தர்.

தோணிநிகழ் பாற்கடலிற் றுய்த்தரன்ரு னங்களெனும்
சேணுயருங் கிரியிவர்ந்து தெள்ளுதமிழ் மழைபொழிந்து
கோணிலென்பா யிழைமுதற்பைங் கூழ்வளர்த்துப் புன்சமணர்
பேணுநெறி மலையிடித்துப் பிளந்தபெரு முகில் போற்றி. 13

## திருநாவுக்கரசர்.

கூர்த்தவாய் மூர்மலைநின் றெழுந்தமண்பா ழியிலன்ஞர்
வீழ்த்தவீழ்ந் தாற்றியங்கு மிகுபொருளை யரித்துவந்தே
ஆர்த்தவர சாலுறுத்தே அருட்கடல்சேர்ந் தறம்பூத்த
தீர்த்த நதி யெனுநாவுக் கரையர்பதஞ் சிரத்தணிவாம். 14

## திருநாவலூரர்.

பரவையிற்போய்ப் புகுந்தாடிப் பலநற்ரு னம்பணிந்து
பெருகியசங் கிலிநிகள பெந்தனத்திற் றடைப்பட்டு
விரகின்முரித் தடுமுதலை மிசைந்தபா லகனையழைத்
திரசிதவோங் கலிற்சேர்ந்தோ னிருசரண மலர்போற்றி. 15

## மாணிக்கவாசகர்.

வாதவூ ரிலகவந்து மா றனெழிற் கோளிறுவி
நாதர்திரு வடிபெற்றுப் பெருந்துறையி னற்றமிழைப்
பூதலங்க டொறும்பாடிப் பொதுவினடங் கண்டுபுத்தர்
தீதகலச் செய்துவென்ற செம்மணிவா சகர்போற்றி. 16

## சண்டேசுரர்.

வேதியன் ருதை யாசா னென்னினும் வேணி யானைக்
கோதகல் பூசை யாற்றுங் கொள்கையிற் குற்றஞ் செய்தால்
நீதியாக் கோற லென்னு நெறியினைக் காட்டி யெந்தை
பாததா மரையிற் சேர்ந்த பண்ணவன் றிருத்தாள் போற்றி. 17

## குருபரம்பரை வணக்கம்.

திருக்கிளர் கைலை மலையினிற் காவல்
சேர்நந்தி திகழ்சனற் குமரன்
பெருக்கருள் சத்ய ஞானதே சிகனெம்
பிஞ்ஞகன் ஞும்பர ஞ்சோதி
இருக்குமெய் கண்ட சிவனரு ணந்தி
யெழின்மறை ஞானசம் பந்தர்
உருக்கமுற் றுளநம் முமாபதி யென்னும்
முத்தமர் திருவடி போற்றி. 18

## அடியார் வணக்கம்.

பொன்னெயில்சூழ்ந் திலங்குதிருப் பனந்தாளிற் பொலிந்தோங்கு
தன்னிகராஞ் செஞ்சடைவே தியர்கோயிற் றணவாது
பன்னரிய திருப்பணிகள் பலமுறையிற் ருமகிழ்ந்து
மன்னியவன் போடியற்று மகேசுரரை வணங்குவாம். 19

## நூற்பயன்.

திருமருவு தென்பனசைப் புராணந் தன்னைச்
சிந்தைமிகத் தூயவராய்ச் சிறந்து கேட்போர்
பொருவருமங் கலமெய்திப் புகழின் மிக்க
புதல்வரொடு மிகுபொருளும் பொருந்திப் பூமேல்
தருமருவு பொன்னுலக மெய்தி யாங்கு
தங்குபெரும் போகமெலாந் துய்த்துப் பின்னர்
கருவுருவெம் பிறவிதனி லடையா ராகிக்
கண்ணுதலான் றிருவடியிற் கலந்து வாழ்வார். 20

## அவையடக்கம்.

விரிவினுற் கவியு மேற்றமுத் தமிழும்
விநோதமாய்க் கற்றுவல் லோர்கள்
பெருகுமா சபைமுன் பேதையே னொருநூற்
பிரியமுற் றுரைத்தது வேழ

முரவொலி மிகுத்த மேருவைச் சூழு
முதயவன் றனக்குநே ரென்றோர்
மரமதிற் குலவி மகிழ்ந்துமின் மினிதான்
மருவிய தகைமை யொத்துளதால். 21

திருப்பனந் தாளின் மேவுசெஞ் சடைவே
தியர்பொருட் சிறந்தில குதலால்
விரித்தியா னுரைத்த சொல்வழு வெனினும்
விழுமிய தெனவியந் துரைப்பார்
அருத்தியிற் குயிற்றும் பசும்பொன்மா மகுடத்
தமைவுற வனப்புட னழுந்த
இருத்திய மணியோ டியைந்திடு மரக்கை
யிகழ்ந்துளா ருலகினி லியாரே. 22

### புராண வரலாறு.

பகவனன் றுமைக்குப் பகரமா மயிலோன்
பாலவள் மொழியநந் திசர்
புகரறத் தெளிந்து போதமுற் றருளும்
புகல்சனற் குமரனுக் கோத
மகிழ்வின லவன்றான் வியாதனுக் குரைப்ப
மற்றவன் சூதனுக் கிசைப்பத்
தகுதவர்க் கவன்றான் விளம்புமாக் கதையைத்
தமிழினு லியன்றவா றறைவாம். 23

சம்புமைக் கரிய ஞானமுற் றுரைப்பான்
தகுதலம் பிறந்தமான் மியமும்
அம்புயன் சாபந் தீர்ந்தது நாற்கோட்
டாம்பலங் கடைந்தது மகவான்
கம்பிதத் துடன்வந் தருச்சித்த வாறுங்
கடிதுதா டகையினுக் கிரங்கிப்
பைம்பொன்மா முடியை வளைத்ததுங் கும்பன்
பண்ணுபூ சனைமகிழ்ந் ததுவும். 24

மாலருச் சித்த வாறுமார்த் தாண்டன்
வழிபடுந் தன்மையுஞ் சோமன்
ஏலவந் ததுவுஞ் சேடனுற் றதுவு
மெழில்நாக கன்னியேய்ந் ததுவும்

காலமார் நாக கன்னன்மா கயிலை
கடிதடைந் ததுவுமுத் தரத்தில்
தாலமாள் தரும சேனன்வந் தணைந்து
தனையரைப் பெற்றவற் புதமும். 25

காமரிற் சங்கு கன்னனூர்ந் ததுவுங்
காகமுங் கயிலையுற் றதுவும்
தோமறு மெக்ஞ குப்தன்மே வியதுந்
தூயதீர்த் தத்தின்மான் மியமும்
ஏமமில் கலயர் முடிநிமிர்த் ததுவு
மீரொன்பான் சருக்கமாய் வகுத்துப்
பாமரு வியபண் டிதரெலா முவக்கப்
பகருவன் மிகுத்தவா சையினால். 26

பாயிரமுற்றிற்று.



## நைமிசச் சருக்கம்.

செருந்தி செண்பகந் தீபதா பரஞ்சம்பு திகிரி
நரந்தை சந்துநீ பஞ்செறி கூவிள நாகம்
பொருந்து மாவகில் மாதுளை பாடலம் புரசு
நெருங்கி நிற்பது நைமிச நீள்வன மாதோ. 1

நனிசி றந்தது சிற்பரா னந்தமே நணுகி
யினிய நற்றவர் மகிழ்வது பிரிவுரு விலதே
புனையும் வேற்றுமை யின்றியே சார்ந்ததன் மையினு
லனக மாயது நனிவள மடைந்ததவ் வனத்தில். 2

### வேறு.

இனியசவு னகர்குமுதர் சகடாய ரனந்தமுனி யேற்ற முற்ற
அனகசம தக்கியா வத்தம்பர் பிருகுமுத லருந்த வத்தோர்
வனைதவவத் திரிவாம தேவர்புலத் தியர்தூரு வாசர் மற்றோர்
அனகனருஞ் சிவபூசைத் தொழிலினைமுக் காலமகிழ்ந் தாற்று
[வாரால்.

முதிருமறை யினைத்தேவர் முழக்குவபோ
லேயறுகால் முழக்கு முன்னம்
கதுவவருட் டிறம்பூண்டு காலமறிந்
தெழுந்துநதி கலந்து மூழ்கி
புதியபுலி யதளாடை முதலாய
வுடைபுனைந்து பூதி யக்கம்
விதியிலணிந் திசைத்தகட னித்தலுஞ்செய்
தினிதுவந்து மேவு வாரால். 4

தூயதழ லாகுதிநித் தலும்புரிந்தம்
மகம்முடித்துத் தொக்க வேலை
யாயிடையி னீரொன்பா னுயபுரா
ணங்கிடக்கு மறையா முள்ள
மேயவருந் தவச்சூத முனிவனெனு
மார்த்தாண்ட னெழுந்த போதில்
சேயொளிகுண் டலக்குழையோர் முகசலச
மலர்கள்விக சிதங்க ளான. 5

ஆனபொழு திலம்பாடுற் றேன்சேம
நிதிகண்ட தாக வல்லே
சோனைவிழி நீர்பெருக ஆனந்தப்
பெருக்காற்றிற் றேய்ந் தெழுந்து
மானநனி தரப்போற்றி யருக்கியபாத்
தியமாச மனங்க ளாதி
தானிலக மகிழ்ந்தளித்து மானதளா
சனத்திருத்தி வணங்கி மன்னே. 6

ஆரவுரைத் தொருவினு கேட்குதுமென்
றுனுமிதயத் தடங்கா வாசைப்
பேருததி மூழ்கினே மையநின
துத்தரமாம் பெரிய தீரஞ்
சேரும்வகை யருடியென வழகிதுநீ
ருரைமினெனச் சிறந்து மேலா
யேரிலக நின்றசது விதசம்பத்
துதவுதல மிசைப்பா யென்றூர். 7

என்றுரைத்த காலையினிற் பனந்தாளின்
முளைத்தெழுந்த விறைவன் றன்னை
மன்றினட மகிழ்ந்தானை யருவுருவா
கியஞான வடிவை யுன்னித்
துன்றுமுரோ மம்பொடிப்பத் தனைமறந்து
வானந்தத் தூநீர் மூழ்கி
சென்றுபர வசமாதி யடைந்த தற்பின்
தமதறிவு தெளியச் சொல்வான். 8

விழுமமிகத் தரும்புலனை வென்றமா
தவர்கேண்மின் விமல னேது
மழகியநற் பிரமாண்ட புராணத்து
ளெழுபதின்மே லத்தி யாயத்
திழிவறுமாக் கதையிதனைப் பக்குவமி
லார்க்குரையே லென்று வேத
வழிதெரித்தோ னெக்குரைத்தா னிதற்குநீ
ருரியரென வகுத்துச் சொல்வான். 9

பாயிரச் சருக்கம் முற்றிற்று.

# முதலாவது ஞானோபதேசச் சருக்கம்

குஞ்சியிற் சுட்டி துயல்வரு மதலை
கொண்டுண விறைதர விலக்கா
வஞ்சிறை யறுகா லேழிசை பாட
லரற்றிய தண்டுழாய்ப் படலை
மஞ்சுழைப் புயத்தில் வனையுமா லதனுல்
வலியவன் றனையடை வாமென்
றெஞ்சலிற் றிரண்டு பயோததி பரந்த
தெனத்திகழ் கைலையஞ் சிலம்பு. 1

அன்னதிற் சனக ரகத்தியர் வியாத
ராதியோர் போற்றவீற் றிருக்குந்
தன்னிக ரிரண்டாஞ் சம்புவை யிறைஞ்சிச்
சனற்குமா ரன்புகழ்ந் தெவர்க்கும்
பன்னரும் பதவி தருஞ்சிவ தலத்தின்
பகுதியெற் குரைத்தரு ளென்ன
மன்னுமெத் தலத்து மான்மிய முழுதும்
வடித்துணர்ந் தவனிசைத் திடுவான். 2

இக்கயி லையினி லனந்தகற் பத்தி
லிறைவனை யிறைவிமெய்ஞ் ஞானப்
பக்கம் வைத்தருளு மென்னவீழ்ந் திறைஞ்சப்
பண்புபெற் றதிகமாய் விளங்குந்
தெக்கண பூமிப் பரப்பிலெங் கிளையிற்
றிகழ்பனை யுளததன் புடையின்
மிக்குறு தால வனமுறு மங்கண்
மேவுதி யருளுவ மென்றான். 3

அப்பொழு தகில நாயகி யதனை
யரிதினி லகன்றுகே தாரம்
ஒப்பருங் காசிப் பருப்பத விலங்க
லூற்றகா ளத்திநற் காஞ்சி
துப்பம ரதிகை கோவல்வீ ரட்டந்
துலங்குசிற் றம்பல மிறைஞ்சிக்
கைப்பது மங்கள் கூப்பிநீள் பனையின்
காடுகண் டடைந்தனள் மாதோ. 4

அக்கண மதனில் பூரணப் பொருளை
யன்புட னிதயத்தி லிருத்தி
திக்கிரு நான்கி லத்தகு வடுகத்
தேவரைச் சேர்த்திமேற் சாத்தன்
மிக்ககீழ்த் திசையிற் கணபதி தன்னை
விழைந்துறப் புரிந்தெதிர் முகமாய்த்
தக்கமேற் கடைந்து சேடியர் சூழச்
சரோருக வாசனத் திருந்தாள். 5

இருந்துசெஞ் சடைவே தியரிரு பதங்க
ளிதயமீ தழுத்திமெய்ஞ் ஞானம்
பரந்துயர் கதியெவ் வுயிர்களு மடைவான்
பானலங் கண்ணிணை மூடிப்
பொருந்தருந் தவத்தைப் போதையா ரியற்றப்
புராரியோர்ந் தங்ஙன மடைந்தான்
உரந்திக ழுமைகண் டடியிணை வணங்க
வுன்றவ நன்றெனவுரைத்தான். 6

தூயமெய் வியர்த்து நாத்தழு தழுத்துத்
தொக்கரோ மம்பொடித் தரும்பி
நேயமிக் குவந்து நெடிதுறப் பணிந்து
நிமலனே யருச்சனை புரிதற்
காயதோர் தீர்த்த மருள்கவிங் கென்ன
அம்பிகை கரத்தினு லழைக்கத்
தேயமார் மண்ணி மாநதி யாகிச்
சென்றவந் நதிவர வுரைப்பாம். 7

வானக டுரிஞ்சி நிவந்துயர் செய்ய
மால்வரை மேவிய முருகன்
றானனை யுமையாள் கருதிய துணர்ந்து
தக்கதன் சக்தியை நோக்கி
நீனெறி காட்டி யேகென வந்த
நீத்தமவ் வழியினிற் குறிஞ்சித்
தேனுமா ரமுங்கான் முல்லையுந் துளவுஞ்
செம்மலர் பலசுமந் தணைந்து. 8

வரநதி சிற்ப நூல்விதித் தனபோல்
வருகையால் மண்ணியென் றொருபேர்
பரையுமை விளிக்க வந்ததா கையினுற்
பகரருஞ் சத்திமா நதியென்
றொருபெய ராகு மருந்தவ வின்னு
மொப்பிலா வங்நதி வந்த
வரவொரு வகையா விளங்குமவ் வகையின்
மாண்பையுங் கேண்மினென் றுரைப்பான். 9

குறுமுனி கரகத் தரனுயர் கங்கை
கொடுத்திட வவ்வரைத் தாழ்வில்
செறியவைத் திட்டுச் சிறுதொழிற் கேகத்
சிந்துர முகப்பரன் கொடிபோல்
அறலிணைக் கவிழ்க்கச் சத்திமா நதியி
லடைந்துவங் ததுவென விந்த
முறைமையு முரைத்தா னமலைபூ சித்த
முயற்சியு மெடுத்திவி மொழிவான். 10

**வேறு**

சேடிமாரை வருதிரென்று செப்பிவாச மாமலர்
நீடுபத்தி ரங்களாதி நிலவவின்று கொணர்மினென்
றூடிநீரி னக்கநீ றணிந்துசெய்க டன்கழித்
தோடவைத்த பொன்கடுப்ப வுளமிலங்க நின்றரோ. 11

செய்யபூச னைக்கமைத்த திரவியங்க ளியாவையு
மையடர்ந் தடர்ந்தவோதி மழைமதர்க்கண் மாதரார்
மெய்யினுடு சாயையென்ன மேவுசேடி மார்தரத்
தையலந்தி சந்தியுச்சி தானறிந் தியற்றுவாள். 12

கந்தமாதி சோடசங்க லந்தவெண்வி தார்ச்சனை
சந்தமிக்க தத்தியோத னங்களாதி யாவையு
மிந்துசேக ரற்குமானை வேத்தியங்க ளின்புற
மந்திரங்க ளாகமத்தின் வழிவிளங்க வியற்றினுள். 13

நண்பினிந்த வண்ணமேபன் னுளியற்று காலையின்
மண்பரிந் தயின்றமாய னேடுதாளு மத்தமும்
பண்பினீடு கங்கைதிங்கள் பரித்தசெய்ய வேணியும்
திண்பொலிந்த தோளின்மாழை சிவனுகொன்றை மாலையும். 14

அழகுமிக்க வந்தனுள ளுகவம்மை காணநின்
றெழில்மிகுத்த லிங்கமுன் னிருந்துகாண வுற்றபோ
திழியுமாலை யருவிமான விருகணீர் பொழிந்திட
தொழுதபின் பெழுந்துவேத முறையினிற் றுதித்தனள். 15

**வேறு.**

என்றுவே தாகமத்தா லிறைஞ்சிநின் றேத்துந் தேனை
மன்றலங் குழல்சேர் பைம்பொன் மால்வரை மயிலை நோக்கி
மின்றிருச் சடிலத் தண்ணல் மிகமகிழ்ந் துனக்கு வேண்டு
நன்றுசேர் வரங்களென்ன நாயகி மகிழ்ந்து சொல்வாள். 16

கருணைநா யகனே யன்று கவினுற விடப்பா லீந்தா
யிருமைசேர் வலப்பா கத்தை யின்றுதந் தருள வேண்டும்
பெருமித வுலகிற் கெல்லாம் பெரியநா யகியென் றென்பேர்
விரிவினுல் விளங்க நல்காய் விமலனே யென்று தாழ்ந்தாள். 17

நஞ்சடை கண்ட நின்னை நலம்பெறத் தெரிசித் தோர்கள்
மஞ்சடை குழலார் பொன்சேய் வயங்கிய செல்வந் துய்த்து
நெஞ்சடை தீது நீங்கி நீள்கயி லையிற்சென் றேபின்
செஞ்சடைத் தேவ வாங்கே திகழ்ந்திட வேண்டு மென்ருள். 18

உரககங் கணநினக்கு முமாபதி யென்னும் பேரும்
வரநதி யதற்கு மூர்க்கும் வயங்குமெம் பெயரினுலே
யுரைவழங் கிடவும் வேண்டு மென்றன ளுமையாள் யார்க்கும்
பரமென நின்ரு னந்தப் படியருள் நல்கி னுனுல். 19

தெரிவரு நற்ரு னத்திற் றிகழ்ந்திடுந் தேவிக் கெல்லாம்
பெரியவ ளாகியிங்கே பிரிந்திடா வலப்பா கத்தில்
மருவுதி யென்ன வெங்கள் மலைமகள் தாழ்ந்து நின்று
பொருவரு ஞானமெற்குப் புகலுதி யென்று சொன்னுள். 20

அப்பொழு தமலன் கூறு மரிவைநிற் கமைய முன்னஞ்
செப்பினே மில்லை யிப்பாற் றீர்ந்தபக் குவத்திற் கேட்ட
யொப்பினன் பானீ நின்னு லுயர்ந்தமா மாயை தன்னிற்
றுப்பமர் நாத மாதி சுத்தத் துவங்க டோன்றும். 21

அவமறக் கால மாதி யசுத்தமா யையினிற் றேன்று
கவையின்மா னதனிற் றேன்றி நாலாறு கருவி தன்பாற்
றவலற வுதியா நிற்குந் தருமிவை தானு யான்மா
புவமுறு மொடுங்கு மின்ப துன்பனு பவியா நிற்கும். 22

இப்படியி தாகி தங்க ளியைந்துசெல் காலந் தன்னிற்
றப்பில்நம் மருளி னுலே தகுஞ்சிவ தன்ம மேவும்
வெப்புறும் வினைநே ராக மிகுமல பாக மாகும்
வைப்பில்சத் திநிபா தங்கள் வருமென்று கமங்க ளோதும். 23

நித்தியா நித்தி யங்கள் நிகழ்வைத் துவேக மற்றும்
மொத்திக மூத்தி ரார்த்த முயர்பர போக மெல்லாம்
கைத்திடுமி ராக மென்றுங் கழறிய சமைக ளாதி
சுத்தமிக் கெழுமு மூட்சுத் துவமுற மறைகளோதும். 24

இம்முறை விவேக முற்றோர் இகல்விட யங்கள் மாற்றிச்
செம்மைசேர் மனத்த ராகிச் செகத் துவர்ப் புற்று நீங்கா
மைம்மய லகற்றி யேய்ந்த வடிவமுங் கருவி யாவும்
வெம்மையார் பிறவி மற்று மித்தையாய்க் காண்பா ரென்று. 25

வரைமகட் கடைவிற் சொன்னுன் வள்ளலா குதிவேட் டுள்ளத்
திருமைசேர் சனற்கு மார வென்றநந் தீசரைப் பார்த்
துரையினுக் கடங்கா வொன்றை யுணர்த்திய முறைமை யாவுந்
தெரிதர வருள்வா யென்னுஞ் செழுந்தவன் றனக்குச்
[சொல்வான்.

தாகமெய் யிகழ்தல் கேட்டல் தற்காண்டல் நூல்சிந் தித்தல்
சேகமார் பொருளின் மேவல் தெளிதலா னந்தா தீத
யோகுறல் நிட்டை கூடல் உயர்ஞானச் சரியை யாதி
யாகமெய்ச் சித்தாந் தத்தி லறைந்திடுங் கயற்கண் மின்னே. 27

முப்பொரு ளநாதி யாக மொழியுமா கமங்க ளியாவும்
அப்பொருள் மூன்றுஞ் சத்தா யமர்ந்திடு முன்ன மேவு
மெய்ப்பொருள் பதியா மந்த மிகுபொரு ளருளி னுலே
செப்புறு நாமே கொண்ட திருவுரு வாகு மின்னே. 28

பகர்ந்திடும் பசுவோ வென்னிற் பகுமல மூழ்கி யென்றுந்
தகர்ந்திடுஞ் சடமே போலச் சலிப்பின்றி யநாதி யாகி
வுகந்திடு மறிவொன் றின்றி யுறும்பதி யருளினாலே
சகந்தரு மாயை மேவித் தநுகர ணாதியாலே. 29

பிறப்பிறப் பியைந்து நாளும் பெருந்துன்பக் கடலின் வீழ்ந்தே
வறப்புற வாடி யோரா மதிசெய்நல் விதியி னாலே
அறப்பெரும் பிறப்பை யுற்றே யறிவுறீஇ யிறையா நம்மை
திறப்பணி செய்து போற்றத் திகழிரு வினையொப் பெய்தும். 30

சத்திநி பாத மேவத் தம்முதல் குருவாய் வந்தே
பித்தினை யருளாற் பார்த்துப் பேரொளி ஞான மீந்தே
பத்தியை யளிக்கப் பூர்ணப் பரவருண் மயமாய் மேவி
முத்தியை யணைந்தின் பாயே முயங்கிடும் பலவாய் மாதே. 31

பாசமோ வென்னின் மூன்றாய்ப் பகர்ந்திடு மருவா யென்று
நாசமின் மலமு மூன்றாய் நவிலுயிர் தம்மைப் பற்றித்
தேசுறச் சடம்போ லாக்கிச் செயலறச் செய்வ தாகு
தூசறு மாயை மேவுந் தொகுமுயிர்க் குடன்நான் காமே. 32

வினையிரு வினையாய் மேவி மிகுமுயிர்க் குடன்முன் னை
வினைவுற வீந்து பாவ மெழிலற மியைத்து நாளுந்
தினையுறு மின்ப துன்பச் செனனமாங் கடலின் வீழ்த்தி
தனையுற வறியு ஞானந் தருமிகு வினையொப் பீயும். 33

ஆதலால் மூன்று நம்பே ரருட்குரு முகத்தா லோர்ந்தே
நீதறுங் குரவன் கண்ணுற் றிகழ்மல நீக்க நீங்கிக்
காதுறு மாயை வாயாற் கழறுருக் காட்சி சுத்தி
யோதுறும் வழியான் மாய்த்தே யுறும்வினை யுயிர்க்கு மூன்றாய்.

உரைத்திடு முருவங் காட்சி யுயர்சுத்தி யுணர்த லாலே
விரைத்திட மாய்த்து நம்மை விளக்குருக் காட்சி யாலே
நிரைத்துற வறிந்து சோக நினைவினு னுமே யாகி
யிரைத்திடாக் கடலே போல இருந்திடல் முத்தி யாமே. 35

இவ்வண்ணஞ் சித்தாந் தத்தி லிசைக்குமெய்ஞ் ஞானந் தன்னை
செவ்வனே குருவாற்கேட்டோர் செனனமொன் றினிலே முத்திப்
பவ்வமே படிந்து மாயாப் பரானந்த வடிவ மாவார்
நவ்விசேர் விழியா யொன்று நவிலுதுங் கேட்டி யின்னே. 36

பதியொளி கண்ணே யான்மா பகரிருள் பாச மாகும்
வதியுயிர்க் கண்ணைப் பாச வல்லிருள் மறைத்த லாலே
பதியினைக் காணு வான்மாப் பதியருட் குருவாய் வந்துண்
மிதியிரு ளிரிய ஞானம் விளக்கலாற் சிவத்தோன் றுமே. 37

பரிதியின் னொளிகண் டோர்க்குப் பாயிருள் விளங்கி டாப்போற்
கருதிய சிவத்தின் ஞானங் கண்டவர் தமக்கென் னுளுந்
திருதியா மலமுந் துன்புந் தீயவன் பிறப்பு மின்றே
சுருதியு மூன்று முள்ள தொன்மையென் றுரைக்கு நாலே. 38

சற்குரு வருள்பெற் றோர்கள் தம்முடல் பொருளோ டாவி
நிற்கரங் கொடுத்தோ மென்று நிகழ்த்தியீந் திடலா லென்றுந்
தற்கெனச் செயலொன் றின்றித் தனிப்பரன் செயலே யாக
நற்பணி யொழிந்தொன் றாகி நண்ணலாற் சிவமே யாவர். 39

ஆகையி னவர்க்கென் னுளு மருவினை யொன்றுஞ் சாரா
தோகையிற் சீவன் முத்தி யுற்றொரு சலன மின்றிச்
சாகையு மிருந்து பின்னே தனிப்பதிப் பொருளோ டொன்றி
வாகையி னிறைந்த பூர்ண வடிவமாய்ப் பிறப்பு றுரே. 40

இந்நிலை யெளிதி னெய்யா ரிறையெழுத் தாகு மைந்தின்
றன்னிலைப் பொருளு ணர்ந்தே தனியிறை யெழுத்தை முன்னே
மன்னிட வைத்து ரைக்கின் மாவருள் வந்தான் மாவைப்
பின்னிடுந் திரோத மாசு பேர்த்திறை யெழுத்தாக் குமமே. 41

இவ்வித மஞ்செ ழுத்தை இயம்பியுட் பூசை செய்தே
திவ்விய நாபி குண்டத் தீதனி லமுத விந்தாற்
கவ்விய ஓமஞ் செய்து கடவுளுக் கர்ப்ப ணித்தே
செவ்விய புருவ மத்தி சேர்த்தெனு சோக மென்றே. 42

என்றுரைத் தருட்க ணுேக்கா லிறைவியை நோக்கித் தீக்கை
நன்றுறப் புரிந்தா ருறும் நண்ணிடாப் பதங்கள் சூட்டி
மன்றுறு மைந்தெ ழுத்தை வரன்முறை யுபதே சித்துத்
தன்றிரு நீறு மாலை தரித்துநீ வாழி யென்ருன். 43

மருவுமெய்ஞ் ஞான மேனின் வடிவமா மருவ லாலே
வுரியபூ ருவத்தை நோக்கி யுற்றநம் வலப்பா கத்தே
மருவுதி நின்னைக் கண்டு வணங்கினேர்க் கிம்மை தன்னில்
பொருவரு ஞானஞ் செல்வம் புத்திரப் பேறு மற்றும். 44

பெற்றினி திருப்ப ரென்று பெரியநா யகியார் கேட்க
வெற்றிகொள் விடையான் கூற விமலைதாழ்ந் தடிய னேற்கு
நற்றிருப் பனந்தாள் மேன்மை நவின்றருள் செய்வா யென்ன
சுற்றிய சடையெம் மீசன் தொகுத்தினி துரைக்க லுற்ருன். 45

## வேறு

சூலமறல் தீயுலவை வானமிவை
நேற்பிறழு நாளிலொளி தாவுபொலனே
டேலுமெழி ஞடரச ஞயவிமை
யோர்கள்மது வேயுமலர் நாலுமுகனே
ராலிலையி லேதுயின்மு ராரிதிசை
க்காவலர்க ளாரன்முத ஞள்கள்பலகோள்
சீலமுள யாவுமழி போதுநிலை
யாகநிகழ் சீர்மைபெறு தாலவனமே. 46

## வேறு

அழுக்கருங் கேழ்மவுலி யழுத்துமொன்
பான்மணியு மமைத்ததன் மேன்மணியுமே
தழைத்தவிண் டாரகைகள் விளக்கமுந்
தூயகலை தணப்பரும் பான்மதியுமே
எழுத்தொரைம் பானுமதி லிசைத்தவெர்ன்
ருனதுவு மெனத்தலம் பூவுலகிலே
செழிக்குமின் பாமவையின் மிகுத்துநண்
பாயிலகு திருப்பனந்தா ணகரமே. 47

## வேறு

பனசையென் றெருகா லோதிற் பங்கயன் செல்வந் துய்ப்பர்
பனசையென் றெருகாற் கூறிற் பணிலமா லுருவி லேய்வர்
பனசையென் றன்பின் முக்கால் பகர்ந்திடிற் கைலை சேர்வர்
பனசைமான் மியநாம் சொல்லப் பன்னெடு நாளும் போதா. 48

உரியசீர்ப் பனந்தா ளென்றே
வோதுவோர் ஒலியைக் கேட்டோர்
பொருவில்விண் ணுலகத் தெய்திப்
புரந்தர ஞகி வாழ்வார்
தெரியவோ ரிரவுற் ருேருஞ்
சேயிழை வேட்டுற் ருேரும்
கரவிலுற் ருேரு நந்தங்
கயிலைசேர்ந் திருப்ப ரன்றே 49

மனமுரை காயத் தோடும் வாசமுற் றவரன் பாரத்
தனைநிகர் பனசை யென்ருேர் சாற்றிய தன்பிற் கேட்டோர்
அனகநற் சிவலோ கத்தி லடைந்தரும் போகந் துய்த்துக்
கனைகடற் புவியிற் ருேன்றிக் கருதரு முத்தி சேர்வர். 50

வசையதிற் றிருந்தி றந்த மனிதர்நங் கைலை சேர்வர்
பசுபட்சி தாப ராதி பனசையம் பதிசூ ழெல்லைத்
திசையினின் மரித்தாற் றேவ ராயுறுந் திகழன் ருதி
மிசைதரக் கொடுத்தோர் நந்தம் மெய்ம்மையாம் ஞானஞ்
சேர்வர். 51

தக்தண் பனந்தாள் தன்னிற் ருபதர் மகேசு ரர்க்குப்
பக்கமுற் றுரையுள் ளன்னம் பரிவினிற் கொடுத்த மைத்தோர்
இக்கணின் மிகநி றைந்த இரேணுவொன் றினுக்கு மாதே
மிக்ககற் பங்க ளூறு சிவலோக மேவி வாழ்வார். 52

ஏகமூன் றைந்தா றெட்டு வகையினி லெமது நாமம்
பாகபக் குவங்கள் நோக்கிப் பரிந்துதே சிகன்சொல் வண்ணம்
தாகமுற் றுயர்ப னந்தாள் தலத்திலுச் சரித்தோர்க் கெல்லா
போகையி லொன்றி னுக்கா யிரமதா யுதவு மின்னே. 53

**வேறு**

ஆகை யா லுய ரிப்பதி கைலையி லதிகமென் றெழுந்தோ நங்
தேக மற்றுள தலமிது நம்முயிர் தீர்த்தமுன் வடிவாகு
மாகர் வந்தனு தினந்தொழு மித்தல மான்மியம் புவிதாங்கும்
போகி யாயிர நாவினுற் சொல்லவும் புகுவனோ வெருவாமல். 54

**வேறு**

நந்நமக் கரிய பூசை நடப்பித்தோர் நமைக்கு றித்து
மைந்துறு தோப்பு நந்த வனமுத லமைத்தோர்க் கெல்லாம்
பந்தமுற் றுலகில் வாழ்ந்து பரகதி சேர்வர் திண்ணம்
கொந்தவிழ் குழலாய் என்று கூறினன் குமுகன் மாதோ. 55

என்றருள் செய்த நந்தி யிணையடி தாழ்ந்து நின்று
இன்றுகேட் டுய்ந்தோ மெங்க ளிமாசலக் குரைத்த ஞானம்
நன்றினி மேன டந்த நன்மையை யருள்வா யென்று
வென்றிசேர் சனற்கு மாரன் மேன்மையோ டியம்பு கின்றான். 56

ஞானோபதேசச் சருக்கம்
முற்றிற்று.

## இரண்டாவது பிர்மார்ச்சனைச் சருக்கம்

வாட்டடங் கண்ணி யரியமெய்ஞ் ஞானம்
வள்ளலா ரருள்செய மகிழ்ந்து
கேட்டினி துவந்த காதையை நன்கு
கிளத்திேனம் கிளரளிச் சுரும்பர்
ஏட்டினை யவிழ்த்துப் பாட்டினை முழக்கி
யினியதேன் றேறலுண் டுலாவுஞ்
சேட்டிளங் கமலப் பொகுட்டின்வீற் றிருந்தோன்
செய்தபூ சையின்றிறம் விரிப்பாம். 1

சத்திய வுலகத் தினைப்புரந் தளிப்போன்
சதுர்முகத் தண்ணல்மா மறையோன்
நத்துமா தவனை யடைந்தகங் கரித்து
நம்மினு முயர்ந்தவ னீயோ
இத்தல முழுதும் படைப்பவன் யானே
யென்னலும் மாதவன் வெகுண்டு
யுத்தம தியற்ற இருவரி னுப்பண்
ணெரியுரு வாயிறை நின்றான். 2

இவ்வதி சயங்கண் டுடற்றுத னீங்கி
யிதனடி முடியறிந் தவர்கள்
திவ்விய ரென்று செப்பிமால் கீழும்
திசைமுகன் மேலுமே னமுமாய்
யவ்விய முடன்வெள் ளனமுமாய்த் தேடி
யரியிலைத் தகலிடத் தணைந்தான்
எவ்வுல கத்துஞ் சென்றிற குதிர்ந்தே
யேங்கிநின் றயனிருந் தனனால். 3

ஆயிடை வந்த முடங்கலைக் கண்டிங்
கயன்முடி கண்டன னென்று
மாயவ னிடத்தே யுரைசெய வேண்டு
மணமிகு மலரினுக் கரசே
தாயகே தகையே யென்றனன் பிரமன்
சொல்லிய வண்ணமம் மலருந்
தீயபொய்ம் மொழியைச் செப்பிய துடனே
தீப்பிழம் பாயவெம் பரமன். 4

**வேறு**

அப்போ தழல்வெற் புவெடித் ததனி
லமையா தசினத் தெரியொத் தநகை
வெப்பே வரவங் கணன்மே விமறை
வேதா படிறே தினையின் றிதனுக்
கொப்பா யதொர்பா தகமில் லையுனக்
குயரா லயமற் றிடவர்ச் சனையும்
மெப்போ துமிலா துறநின் றெழிலு
மிசையா தகலென் றுபகர்ந் தனனால். 5

**வேறு**

கைப்பது மங்கள் கூப்பிநின் றலரோன்
கலங்கினன் பிழைபொறுத் தாளென்
றெப்புயர் வகன்ற திருவடி பணிந்தா
னுற்றகே தகையினை நோக்கி
தப்புறு மயற்காப் பொய்க்கரி புகன்றாய்
தகாதுநீ நந்தமக் கென்ன
இப்புவி யினில்நின் றிருவடிக் குதவா
வெழின்மலர்க் கேற்றமொன் றுண்டோ. 6

என்றுவீழ்ந் திறைஞ்ச மலரவற் கருள்வா
னெழில்மறை யோர்கள்தம் முழையிற்
சென்றுயர் சபரி கொள்கவா லயமுந்
திகழன சத்திர மாகென்
றன்றருள் செய்து கேதகைக் கிரங்கி
யம்பிகை தன்றிரு மேனிக்
கொன்றிய மலரா கென்றனன் கருணைக்
குறையுளா நின்றருள் மூர்த்தி. 7

## வேறு

வைகுந் தமடைந் துயர்மா மறையோன்
மதுகு தனன்மா ணடிவீழ்ந் துருகி
பொய்யொன் றுபுகன் றதனு லடியேன்
புரியுந் தொழிலா யபடைப் பொருவி
னையுந் தரமுற் றதுநன் கருளி
நாளுஞ் செயநன் றருள்செய் யெனவே
மெய்கண் கமலத் தவர்வே தனொடு
மேவக் கயிலைக் கிரியுற் றனரால். 8

சிவனே கருணை லயவென் றரிபுத்
தேளிர் புருகூ தனுநின் றெளியோ
மவமோ விடவின் றருள்செய் யெனவே
யடியற் றமரம் பொருவப் பணியப்
புவனே சனுமன் புடனீ விரெலாம்
போதுற் றவையோ துமினென் னவுயிர்
எவையும் பரிபூ ரணநீ யறியா
வியல்பொன் றுளவோ யெனவோ தினரால். 9

## வேறு

நீயிரிங் குற்ற நீர்மை யுணர்ந்தனம்
ஏய வென் றரு ளெந்தை மகபதி
மாய வன்முத லோர்கள் மலரயற்
காய தன்மை யறையவந் தோமென்றார். 10

நந்த முங்களில் நாயக மென்பதும்
ஐந்தொ ழில்களி லொன்றுக்கொன் றுக்கமா
மிந்த நேர்மையி லேற்றமு மெண்ணிலன்
தந்தை யாமெனுந் தன்மையுந் தேர்ந்திலன். 11

கன்றி யுன்னையெண் ணுமற் கழறினன்
பொன்ற வானந் தணர்பெண் புதல்வரை
கொன்ற பாதகத் திற்கொடும் பொய்யினை
யன்று கூறினன் போமக லாதென்முன். 12

என்ற போதி லெவரும் பணிந்தெழா
தின்று நீபொறுத் தாளென வெம்பிரான்
நன்று நீவி ரெழுமென நாடியே
யொன்று தேர்ந்தவர்க் கோதுதன் மேயினுன். 13

முன்ன னந்தகற் பத்தினின் மொய்குழற்
குன்ன ரும்பர ஞான முரைத்தனம்
அன்ன தால வனத்தினி லம்புயன்
இன்னல் தீர வருச்சனை யியற்றிடில். 14

அந்த ணன்குறை யோடுநஞ் சாபமுஞ்
சிந்த வேயருள் செய்திடு வோமென்முன்
எந்தை நன்றென் றெழுந்து பணிந்துயர்
புந்தி யோடும் விடைகொடு போயினர். 15

### வேறு

அந்தை நீங்கிநற் பனசையி னெல்லையுற் றனத்தின்
வந்த வேதியன் வணங்கியஞ் சலியுடன் புகுந்து
பைந்த ருக்களித் தருவென அறிவினிற் பதித்தான்
கந்த மாமல ரோடைக ணிறைதலைக் கண்டான். 16

தகுங்க ரும்புடைந் தொழுகிய சாற்றினைத் தசும்பின்
முகந்து மட்டற வுழவர்க ளடுபுகை முகிலென்
றகங்க ளிப்புறத் தோகைகள் ஆடிடக் குயில்கள்
மகிழ்ந்து கூவநற் பிரமர மிசைசெயக் கண்டான். 17

நாறு பூமகள் விளங்குமிந் நற்பதி தனக்கு
வேறு நேர்கயி லாயமே யென்றகம் வியந்து
கூறு மெல்லையைச் சூழ்ந்தயன் சன்னிதி குறுகித்
தேறு செஞ்சடைத் தேவனை நேர்கண்டு திளைத்தாள். 18

மண்ணைக் கண்டவன் மண்முத லெனுமுப்பத் தாறு
நண்ண ரும்பர ஞானலிங் கத்தையே நாடித்
திண்ண முற்றுடல் மறந்தபின் னறிவினைத் திருப்பி
யெண்ண ரும்பெரு மன்பினு லிறைஞ்சியே யெழுந்தான். 19

எழுந்து மூர்த்தியி னழகினை நோக்கிமா வின்பம்
வழிந்து றத்தனிக் காரண ஆகம வகையி
லொழிந்தி டாதரும் பூசனை புரிவதற் குன்னித்
தழைந்த நற்றடந் தண்டினுற் சதுரமாய்ச் சமைத்தான். 20

தேர ருந்திரு வருளுரு விலிங்கமூர்த் திக்குப்
பூரு வந்தனில் கமலநீ லோற்பலம் பொலியப்
பேருந் தன்பெயர் பெற்றிடப் பிறங்கிய வாவி
நேரி தென்றிடப் புரிந்தன னியதியே நிலவ. 21

உரைத்த வோடையிற் படிந்துபட் டாடைக ளுடுத்தி
பொருக்கெ னத்திரு வெண்பொடி யக்கமும் புனைந்து
வரைத்த வாகம விதியினு லாறெனும் வருணந்
தெரித்து ளாயகா யத்திரி மனுவையுஞ் செபித்தான். 22

**வேறு**

இயற்றருமொன் றுயபிர ணவபீச
முடனேயஞ் செழுத்துங் கூட்டி
முயற்சியிலீ ராயிரமோ ரயுதமுல
வாதுரைத்தான் முளரி வேதன்
உயக்கிமற்றோர் கந்தமல ரற்சிப்ப
ததனினிலை யுறுபுல் லேனுந்
தியக்கமறத் தன்கரத்தாற் கொணர்வதுநன்
றெனஏவச் செய்யான் மாதோ. 23

ஏவலர்கள் மிகச்சூழ வறுகாலே
யிசைபாடி யெழுமுன் சென்று
மேவியுமை யவள்புரியப் பெற்றதிரு
நந்தனத்து வில்வ மற்று
காவலர்பா திரிகடுக்கை சாதிகர
வீரமரை காவி தும்பை
ஆவலுட னெடுத்தெழிலார் கூடைகளிற்
பலமலரு மமைத்த பின்னர். 24

தரிக்கினெடு வட்டகையி னீர்பூரித்
தத்திரத்தாற் றகவே பார்த்துத்
தெரித்திடுசங் தறுகுமுத லிட்டெழுகாற்
பிரணவத்தாற் செபித்து மேலாம்
அருத்தியிற்சா மானியமா மருக்யமுதற்
ருபித்தே யாரு தாரம்
பரிக்கவமைத் தைந்துசுத்தி செய்தனுட்டிப்
பானதெலாம் பண்ணி நின்ருன். 25

கறைமிடற்றுக் கடவுளையன் புறவிதயத்
திருத்திநந்தங் காய மாதிப்
பொறிகளெலா மவனுமென் றனனியபா
வனைபுரிந்து புனனீ ராட்டி
குறையகலெண் ணெய்மஞ்சள் மாவுடனே
சம்பீரக் கொழுஞ்சா ருட்டி
யறலாட்டிப் பால்தயிர்பஞ் சாமிருத
மிடையிற்றா பாதி யீந்தான். 26

மாற்ருரு திலகியபொன் மயத்திலெழின்
மாணிக்க மணிநெ ருங்கி
யாற்றலுற வழுத்தியபொற் குவளைபல
வாபரண மணிந்து பார்த்தான்
ஏற்றமுள் செஞ்சடைவே தியரழகுக்
கிணைகாணே னென்று வேதன்
போற்றிமிக நைந்துருகிப் புளகமெழப்
பிழைபொறுத்த புனிதா வென்று. 27

வயங்கியபொற் பூந்தட்டில் வில்வமொடு
மறுகுசெந்தா மரைப்பூ மற்று
மியங்கியவே தாகமத்தி லியம்பியமந்
திரமிருநான் கியைந்த நாமம்
வியன்றருமா யிரநாம மேவுசத
நாமமொடு மெண்ணி னுமந்
தயங்கவா யிரகோடி மறைமநுவோம்
படவுரைத்துச் சாத்தி னுஙல். 28

தெய்விகஞ்சேர் சந்நிதியின் பாவாடை
முதல்நைவேத் தியங்க ளாதி
செய்திலகு மஞ்சடுக்குத் தீபதூ
பங்கள்முதற் றிகழ் ரெட்டு
மெய்தியுற மிகவளித்துத் தேவதுந்
துபியாதி யியங்க ளெல்லா
மெய்திகழப் புரிவித்து மெய்யுருகி
நிற்கின்ற வேலை தன்னில். 29




வேறு

நின்றுவெகு நாளிழைக்க வொருநா ளெந்தை
நிலவுமெழில் வெள்விடையி னிமலை யோடு
நன்றுதரு மணிக்களமு மூன்று கண்ணு
நாற்புயத்துந் துடியெரிமான் மழுவுஞ் செம்மை
யொன்றுதிரு மேனியினீற் றொளியுங் கால
னுள்நடுங்கி விழப்புரிந்த வுகள தாளும்
என்றினைய கோலமுடன் பனசை நாத
னெதிர்தோன்றித் திசைமுகனுக் கருள்செய்
[கின்றான். 30

வேறு

திசைமுக வுன்குறை தீர நல்கினேம்
வசைதவிர் முடங்கல்நா மன்றி மலைமகள்
நசையுறத் தரிக்கவு நல்கி னேமெனுஞ்
சுசிவிழி நாதனைத் தொழுது கூறுவான். 31

ஆனையந் தணர்தமை யரிவை மார்களை
மானவஞ் சிறுர்தமை வதைத்த பாதகம்
ஏனைய குற்றமு மென்றட மூழ்கினோர்
தானற வருள்கெனச் சாற்றிப் பின்னரும். 32

உரக கங்கண வுனக்கும் பூர்வத்திற்
பெருகு பொய்கைக்கும் பிறங்கு மென்பெயர்
தெரிதர வருளுதி தேவ தேவநின்
னருணடங் காணவு மருளுவா யென்றான். 33

தெளிந்தமுப் பத்துமுக் கோடி தேவரை
யுளந்தனிற் கருதினு னுற்ற நந்திபோய்
வளம்பெறக் கூட்டலும் வந்து மல்கினர்
துளங்கலிற் றூநடந் தொடுத்தன் மேயினன். 34



வேறு

முயலகன் முதுகு நெளிந்திட வூன்று
முளரியம் பாதமும் வீசும்
வியனுறு தாளு மரையினி லதளும்
மிக்கமுந் நூல்புரண் மார்பு
நயமருள் அபய வரதசெங் கரமு
நவில்துடி யனல்மிகு கரத்தின்
வயமுமா னனத்தின் செவ்வியுஞ் சடையின்
மதியமு மாடவா டினனல். 35

கண்டக மகிழ்ந்து நாலிரு விழியிற்
கதித்தநீர் சொரிதர நின்று
திண்டக முடையேன் புரிந்தபா தகமுன்
செம்மலர்க் கேதகைத் துயரும்
விண்டகன் றிடவின் றருள்செய்தா யடியேன்
மேவுகைம் மாறதொன் றுளதோ
பண்டக வுனக்குச் சினகர மமைக்கப்
பராபர வருளெனத் தாழ்ந்து. 36

வேறு

வானின்மயன் றனைக்கூவி வயங்குபிர ணவவடிவந்
தானுருகெற் பக்கிரகந் தபனியமுச் சிகரமொடும்
ஆனவத்த மண்டபம்பொன் னமுத்துமகா மண்டமற்
றேனையமண் டபங்கள்மதில் கோபுரங்க ளியற்றினனல். 37

ஞானமய மாம்பெரிய நாயகியார் தாமுறைய
ஆனகெற்பக் கிரகமுத லனைத்துமமைத் தொளிதிகழும்
தூனலஞ்சே ராண்டமதத் தோல்முகத்தோன் முதலாய
ஏனையவா னவருறைய இடங்கள்பல வினிதமைத்தான். 38

எத்துநூல் விதித்தபடி யெண்டிசா முகநோக்கி
யொத்தவிழா வீதிகளு முயர்சிற்ப நூல்முறையே
மெய்த்தவறச் சாலைகளும் விளங்குதண்ணீர்ப் பந்தர்களும்
நத்துபசுச் சாலைகளு நாற்புறமுஞ் செய்தமைத்து. 39

மறைபயிலந் தணர்வீதி மகேசுரர்மன் னவர்வீதி
நிறைவசிய ருறைவீதி நிறைதபோ தனருறையுள்
முறைதருபின் னவர்வீதி முதிரநுலோ மர்கள்வீதி
யுறைபிரதி லோமர்முத லோதருவீ திகளமைத்தான். 40

அவ்வீதி களுமமைத்தே அரும்பரியூ ஷதசாந்தி
செவ்வியுறச் செய்தமைத்துத் திருந்துமா ளிகைவகுத்து
நவ்வியமர் கரத்தார்க்கு நாடோறும் பூசனைக
ளெவ்வமுறில் மாற்றுதற்கே யெழில்நைமித் திகமியற்ற. 41

அரும்பூதங் கயிலாய மானிபமிந் திரமானம்
வரைந்தபரி சுகமெகினம் மன்னுமதி காரநந்தி
விரிந்தகொடி முதலான வியன்றருநற் பந்தர்களும்
தெரிந்தவிழா விற்குரிய சேமங்கள் செய்தமைத்தான். 42

சைவர்முதல் வீதியினிற் றகுபாசு பதரிரண்டாஞ்
செவ்விதிகழ் வீதியினிற் செப்புமுறை யுட்சமயர்
மெய்வழியா கமவழித்தாய் விளங்குசைவா சாரியர்கள்
எவ்வமற வம்முறையார்ந் திடமடங்க ளினிதமைத்தான் 43

தன்னிகரா கியபிரம சாரியர்வா னப்பிரத்தர்
துன்னுபரம் பொருளையுணர் துறவியரொன் றறியாதோர்
இன்னல்மிக வுறுமங்க வீனர்வறி யோரருந்த
வன்னவறச் சாலைகளு மாயிடைக டொறுமமைத்தான். 44

### வேறு

நந்தன வனங்க ளெங்கு நாளிகே ரங்க ளெங்குங்
கொந்தலர்ச் சோலை யெங்குங் கோதில்பிப் பிலங்க ளெங்குஞ்
சந்துயர் பூக யெங்குந் தக்கசீர்த் துடவை யெங்கும்
மைந்துறு கதலி யெங்கும் மற்றவும் பொருந்தச் செய்தான். 45

### வேறு

செங்நெலா கியபைங் கூழ்கள் திகழ்விளை நிலங்கள் மற்றும்
பின்னல்செஞ் சடையார்க் கீந்து பிறங்கிய நிபந்தம் என்றும்
மன்னிய குடியும் ஏவல் மாக்களும் வளங்க ளோங்க
முன்னயன் அமைத்தா னென்று மொழிந்தனன் நந்தி நாதன். 46

### வேறு

நாடிக் கடலொலி தானே வென்றிட
நலமே வச்செயு மகிமைத்தா
மேடத் திருவழ வானித் திருவணி
மிகுமா தத்திரு விழவிற்சீர்
பீடுற் றிடநை மித்திக மாதிப்
பிறைசேர் செஞ்சடைப் பெம்மாற்கு
மீடிற் கவுரித னக்குமெய் யன்பா
மியல்போ டர்ச்சனை புரிவுற்றூர், 47

### வேறு

இம்முறையி னுள்பல வியற்றிவரு போதி
னம்மைதரு மாகம வளக்கரின் வரம்பை
வெம்மையி லுணர்ந்தசிவ வேதியரை நாடி
வம்மினென வுற்றவர் மகிழ்ந்திட மொழிந்தான். 48

தென்பனசை யண்ணலை யருச்சனைகள் செய்மி
னின்பினுட னென்றுரைசெய் தேறியன மீதே
யன்பொடு தனக்குரிமை யாமுல கடைந்தான்
மன்பதை படைத்திடு மலர்க்கடவு ளென்றூன். 49

நந்தியருள் கண்டுருகி நண்பினி லிறைஞ்சி
சந்தமறை யோதிய சனற்குமர னின்னஞ்
செந்துகிர் சடைக்கடவுள் செய்தவிளை யாடல்
தொந்தமுடன் சொல்லுகென சூதமுனி சொல்வான். 50

பிரம்மார்ச்சனைச் சருக்கம் முற்றிற்று.

## மூன்றாவது அயிராவதச் சருக்கம்

இதமெரி பொருவத் திசைமண முலவ விருமூன்று
பதமுழு முளரிப் பரர்க்தை சொன்னேம் படர்வானின்
மதநனி கமழும் புழையுறு மொருகை மணிநால்வாய்
அதிர்தரு தவளக் களிறியல் வழிபா டதுசொல்வாம். 1

கேழுய ரணிமா லகிமா மகிமா கரிமாவாம்
தாழ்வில் பிராப்தி பிராகா மியமொடு தகநீடும்
வாழிய வீசத் துவநல் வசித்துவ மகிழ்வாகிப்
போழ்தலி லெட்டுச் சித்திக டொழுதொரு புடைமேவ. 2

இலகிய சிந்தா மணியுயர் சங்க மெரிபோலு
நிலவிய செவ்வாய் விரிவுற நிகழ்தே னெடிதூறி
மலிதரு தாமரை குடநிகர் மடியான் மந்தாரம்
பலபல புத்தே ளுருவினில் வந்தொரு பான்மேவ. 3

பிறைபோ லுங்கோ டொருநான் கிருகண் பிறழ்நீள்கை
நிறைமா தங்க மங்கல வெண்பரி நேர்நிற்க
பொறையொடு வைதிக மாமுனி வோர்களும் புடைமேவ
வெறிகமழ் தார்முடி விண்ணவர் பற்பலர் புடைமேவ. 4

நிறைவா மலரோ பொழிலோ புயலோ நிசிதானே
பிறவோ வென்ன வடர்ந்து சுருண்டொளி பெறவேநீண்
டுறுமா சுவலிற் றாழ்குழல் தேனுகு போதின்கண்
அறுகால் வீழா தம்மலர் வாடா தமர்கூந்தல். 5

கீற்றெழு பிறைநடு விற்செஞ் சுடருறு கிளர்வென்னத்
தோற்று நுதற்செந் தூரம் வயங்கச் சுகமாரன்
ஆற்ற லினிக்குவ லைத்தனி நிறைநா ணதுபூட்டி
போற்றிடு மத்தநு வொத்தது நீட்டிய புருவந்தான். 6

இருங்கத லித்தண் டியானைக் கையிது வெனுமூருப்
பொருந்திய சாநு விளங்கிய பாடெழில் பொலிவாகித்
திருந்த வணிந்த சிலம்பு சிலம்பிடு செங்கேழ்கூ
ரரும்பத முந்திகழ் வாகிய மின்சசி யருகார. 7

## வேறு

இருட்பிணி யவிழ்த்து நானநெய் நீவி
யிசையளி விழாமலர் முடித்த
திருக்கிளர் கூந்தல் மேனகை யுடனே
திரம்பெறு மரம்பையா மணங்கு
முருப்பசி மாது மொளிமணி வடங்கச்
சுலாமுலை திலோத்தமை தானும்
விரித்தவி நயங்கள் பலப்பல காட்டி
மின்னென வசைந்துமுன் னடிக்க. 8

வச்சிரப் படைமுன் றிகழமே னாட்டு
மகபதி யெனுமம ரேசன்
நச்சியா யிரங்கண் டிளைத்திட நோக்கி
நற்றவ முனிவரை யிறைஞ்சி
யிச்சையிற் செலுமி னெனவிடை கொடுத்தங்
கெழிலரம் பையர்தமை யகற்றிக்
கச்சுலா முலையாள் சசியுடன் கோயிற்
காமரந் தப்புற மடைந்தான். 9

குயின்முதற் சத்த ஒலிமிக வேங்க
குரைகழ னூபுர மிரங்க
வியன்மிகு மதன கலைவிதி முறையே
விளம்பிய வறுபதி னன்கு
நயனுறு புணர்ச்சி நரலையின் மூழ்கு
நாளில்பொன் னுடைலா மசுரர்
வயமதித் தெரியிற் சுட்டருஞ் சிறைகள்
வவ்விமற் றுளவெலாங் கரந்தார். 10

அப்பொழு தலகி லமரர்போந் திதோர்
அடாதவெம் முறையினைக் கேட்டீ
துப்பமர் குலிச நாயக வென்னச்
சொல்லருங் கரணமும் புலனுஞ்
செப்புமா காமக் கடலுளாழ்ந் தறிவு
தீர்ந்தனன் மகபதி யந்தோ
துப்பமர் மடவார் மயலிற்பட் டவர்க்குத்
தோன்றிடா வறிவுதா னந்தோ. 11

தேவரிற் சிறந்தோ னொருவன்மற் றோர்நாட்
    சிந்தையின் விதியினை யொத்த
மாவிமா னத்தி லிவர்ந்து விண்மீது
    வந்துநின் றுன்புய மலையின்
ஓவிய மனைய சசிமுலை வேழ
    முழக்கவச் சோபமிக் கழுந்துங்
காவல ஓலம் மகபதி யோலங்
    காணென வெடிபடச் சொன்னான். 12

சொல்வது கேட்ட மகபதி யுடனே
    தொல்லயி ராபதங் கொணர்மின்
செல்லிடி முரச முழக்கமிக் கதிரச்
    செய்விமி னென்னவக் கணமே
புல்லக வேக மருத்துவின் வேகம்
    பொருந்திய தூதரைத் தூண்ட
மல்லியற் சுவேத வழுவையைத் தேடி
    வந்துகண் டிலமென வறைந்தார். 13

இயம்பிய மொழிகேட் டிந்திரன் கனன்றான்
    இரும்புவி யினிலொரு பிடியின்
நயந்தரு புணர்ப்பை வேட்டலைந் தரிதி
    னண்ணுமந் தரத்தொரு சார்பி
லியங்குத லுணர்ந்த மகபதி சினத்தி
    லிலங்குமோ ராயிரம் விழியுந்
தயங்கெரிப் புலிங்கந் தானுகச் சீறிச்
    சாற்றுவான் சிற்றமிக் கதனால். 14

முழங்கெரி யனைய கோபமிக் கவரே
    மூலவா ணவச்சிறைச் சாலை
யழுந்திவெம் பிறவிப் பகையினைக் கொண்டே
    யல்லலுற் றழிவர்கா ணந்தோ
கொழுந்து விட்டெழுந்த கருணைமிக் குடையோர்
    குலவுமன் பதைகடம் முயிர்போல்
விழைந்தவர் முத்திக் கடலிடைப் படிவார்
    வியன்சனற் குமர வென்றுரைத்தான். 15

ஆகையா லிந்தப் பதவியா திகளும்
மடைந்துபே ருணர்வுபெற் ருலும்
போகமே பொருளாக் கொண்டுபோந் தழிவர்
புலனடு முனிவிர்கா ளிப்பால்
தேகமே கருகி யவனிவா ரணம்போற்
றிரிந்திடக் கடவதென் றுரைத்தான்
மேகவா கனமு மங்கலப் பரியும்
வியன்றரப் படைத்தமன் னவனே. 16

அக்கண மகவான் றன்புயம் போல
வடற்றகை செறியநின் றுலாவும்
தக்கதிண் சயந்த னுடன்மிகு புலவர்
தங்களை யுய்ந்திடச் சமரிற்
புக்கள விறந்த வப்புமா ரியினைப்
பொழிதர வெதிரெதிர் தடுத்து
மிக்கவெந் தகுவர் கற்பகா லத்தின்
மேகமூ சுவதென வளைத்தார். 17

தருமகா தகனும் பாவகாத் திரனுஞ்
சண்டகோ பனுநராப் தகனுங்
கருநெறிச் சுவாலா பங்கியுந் தூமக்
கண்ணனுஞ் சுராரியு முப்பாற்
சரமெலா மிடுகாட் டுதரனு மவுணர்
தலைவனுஞ் சமர்மழை பொழிந்து
செருமுகத் திமையோர் புறந்தர வலாரி
சிறுவனைச் சூழ்ந்துகொண் டடர்த்தார். 18

வேறு

இடிமுர சிரட்ட வான துந்துபி யேங்கச் செம்பொற்
கொடிநெடுந் தேர்க டாவி விண்ணவர் கோமா னேறி
கடிதுவந் திறுத்த லோடுங் கடவுளர் குழாங்கொண் டன்னுன்
புடைசெறிந் தவுணர் சாயப் பொருபடை வீசி யார்த்தான். 19

வலம்புரி குறித்து மேக வாகன னிமையோர் தம்மை
யலம்புரி யசுரர் கூட்ட மடங்கலு முருமொ லிப்பக்
கிலம்புகு வியாளம் போலக் கிடப்பவிற் குழைத்துக் கன்னத்
தலம்புரி நாரி யேற வாங்கிவெஞ் சரம்பொ ழிந்தான். 20

இந்தவா றுணர்ந்து தான வேந்திரன் வெகுண்டெ ழுந்து
மந்திரிக் கிழவர் நாளு மருங்குவிட் டகலா வீரர்
பந்தமாய் மருவு மூல பலமுடன் படைஞர் மொய்த்தார்
தந்திரத் தலைவர் மற்றத் தகுவருந் திரண்டு சூழ. 21

ஆர்த்தனர் நிருதர் யாரு மமரரு மெதிர்த்தார் வாளி
தூர்த்தன ரிருதி றத்துந் தூசினு முடற்றி நின்றூர்
பார்த்தன ரவுணர் நம்மைப் படுப்பரின் னேயென் றெண்ணி
வேர்த்தனர் மெய்ந் நடுங்கி வெரிங்கொடுத் தணியிற் புக்கார். 22

அக்கண மசுரர் வேந்த னழற்பொறி யிருகண் ணூலும்
நக்கவெள் ளெயிறெ லிப்பக் கடித்துவாய் மடித்து மற்றுந்
திக்கெலா நடுங்க நின்ற தேரினை விரைவிற் றூண்டி
புக்குவெம் பிறைவா யம்பு பொழிந்தனன் மேகம் போல. 23

இருவரு மிந்த வண்ண மெதிரெதிர் தொடுத்த வாளி
யொருவருக் கொருவ ரோவா துடற்றலு மும்பர் மேய
யருமறை முனிவ ரீதென் னுகுமோ வெனம ருண்டு
புரகர வருள்செய் வாயிப் புருகூதற் கெனப்பு கன்றூர். 24

எச்சரா கவமுடித்து மிளைத்திடாத் தகுவ ரேந்திரன்
நச்சரா வணையான் றந்த நாந்தகங் கொண்டெ திர்த்தான்
வச்சிரா யுதத்தா லன்னுன் வலியெலாந் தொலைத்தான் விண்ணுட்
டெச்சரா சரமு மேவ லாற்றிடப் பணிக்கு மேந்தல். 25

மந்திர யூகர் பெற்ற வரங்கள்தன் மாய விஞ்சை
தந்திர வாளர் சேனு சமுத்திரத் தலைவர் மற்றும்
வெந்திற லியாதுங் காணுன் வெறியனுய் நிருதன் நின்றுன்
இந்திர சால மாயிற் றிதற்குமோ ரைய முண்டோ. 26

ஒத்துற ஒருவ னில்லா னென்பதை யுணர்த்தி நின்ற
வத்தகு வசுரர் கோனை யஞ்சலை யெனவ லாரி
மெய்த்துரை யாடிப் போக்க விதிமை திதுவோ வென்றங்
குத்தர மொன்றுஞ் சொல்லா னுமரிற் றனியே சென்றுன். 27

திணைக்கள மாகி யேற்ற செருக்களப் பரப்பெ லாம்வெண்
ணிணக்கள மாயுஞ் செந்நீர் நீத்தவெங் களமா யுந்துன்
மணக்கள மாயு மாயா வல்லவ ருடன்று பட்ட
பிணக்கள மாயு மாடற் பேய்க்கள மாய தன்றே. 28

கவந்தங்க ளொருபா லாட கழுதுக ளொருபா லாடச்
சிவந்தசெங் குருதி யோடத் திசைமுடை நாற்ற மோட்டு
நிவந்தகுன் றங்கள் போல நீள்பிணக் குவைக ணீட
யுவந்தெழு களத்தி யற்கை யும்பர்கோ னேக்கிச் சென்றன். 29

இயம்பல விசைப்பத் தேவ துந்துபி யிரட்ட வென்றிச்
சயந்தனே டிமையோர் சூழச் சசியெனுந் தேவி யோடும்
வியந்திரு டியர்தா மாசி விளம்பமே னகையோ ராதி
நயந்துமுன் னடிக்க நோக்கி நாயகன் கோயில் புக்கான். 30

**வேறு**

அன்றவ னுரைத்தவெஞ் சாப வக்கினி
சென்றுசுட் டிடுகையாற் றியங்கி வெள்ளிபங்
குன்றிமெய் கரிந்தடல் குறைந்து சோபமுற்
றென்றுபே ருணர்வெலா முதறி விட்டதே. 31

கவலையுண் ணடுக்கமுங் கழிம யக்கமும்
அவலமு மழுங்கலு மச்ச மானதும்
துவடரு மியக்கமுந் தொலைவிற் றுன்பமுந்
தவலருங் கண்ணினீர் தானு மிக்கதே. 32

இந்தவா றிருங்களி றரசி யன்றுழ
லந்தவே லையிற்சசி கணவற் கன்புறும்
புந்தியான் பொருவிலங் திருவன் பூவலம்
வந்துசீர் மந்தமா மருங்க ணைந்தனன். 33

அன்னவன் வரவுகண் டரிய வாரண
முன்னுமா மனமென வொருக ணத்தில்வந்
தின்னலுற் றலம்வர வெனக்கு வந்தவை
நன்னரிற் கூறுதி யெனந வின்றதால். 34

இவ்வுரை கேட்டலு மிபத்தை நோக்கியே
அவ்வயின் நடந்தமுன் னடைவெ லாமுரைத்
திவ்வயின் வந்தவா றிதுவென் ருேதினுன்
எவ்வமுற் றுலவையு மேங்கி நின்றதே, 35

இதின்குறை தீர்ப்பரி தென்று நீங்கினு
னதின் பினவ் வலக்கணுற் றழுங்கு காலையில்
துதைந்தசீர் கயிலையிற் ருெழுது தீஞ்சுவை
முதிர்ந்தநன் மகதியாழ் முனிவ னண்ணினுன். 36

கண்டுபே ராசையிற் கதறித் தாளின்மேல்
மண்டிய வெயில்விடாய் கொண்டு மாழ்கினுன்
புண்டரீ கத்தடம் பொருந்துந் தன்மைபோல்
விண்டன னென்குறை யெனவி ழுந்தது. 37

ஆம்பலி தியாதென வகத்து வாள்விழி
கூம்பிடா தோர்ந்துகண் டுணர்ந்து கோதுறச்
சாம்பயி ராபதந் தருவில் வாழிறை
தீம்புவந் தடைந்ததென் றினிது செப்புவான். 38

## வேறு

தான மாமழைத் தந்திகேள் சாபமுன் தொலைக்கும்
வான நாயகர் மகிழ்தலம் நூற்றெட்டு வளமைத்
தான மாமறு பதினெட்டு தக்கமூன் றவைதாம்
வான வர்க்கருள் பனசைமா மதுரைகோ கரணம். 39

சொன்ன மூன்றதிற் சுயம்புவாய்த் தேவதே வேசன்
மன்னி வாழ்வது மகிதலம் புகழுநற் பனசை
யின்ன மூன்றதில் ஏற்றமாம் பனசையே தென்னில்
பொன்னி மாநதி வருமிரு மருங்கினும் பொருந்தும். 40

தூய மாமறைக் கோயிலுந் துலங்குமேற் றிசையிற்
சேய வன்றரு திருநதி யுத்தரத் திசைபோய்
பாயு மேன்மையும் பராபரை யருண்மொழி கேட்க
நேய முற்றகீழ்த் திசைமுக நின்றிடு நிலையும். 41

ஐந்து நற்கிளைத் தாலத்தி னடித்தல மேவி
யிந்து சேகர னிலங்கிய தோற்றமு மெண்ணில்
சிந்து சூழ்புவி யதனிடைத் திவ்விய முற்ற
இந்த நற்பதிக் கிணையதொன் றிலையென மொழிந்தான் 42

கடந்தி கழ்ந்துயர் களிறது கேட்டுடன் பனசை
யடைந்து செஞ்சடை வேதியர் சந்நிதி யதன்மேற்
கிடம்ப டுந்தட மொன்றுநான் மருப்பினு லிடந்து
குடைந்து வெண்பொடி யணிந்துநன் மலர்களுங் கொய்து. 43

உண்ணு ழைந்துபே ரன்பினி லுதித்தெழு முதலை
யண்ணி நின்றுதீம் புனலினைத் திருமுடி யதனில்
நண்ணி யாட்டிநன் மலர்கள்தூ யிவ்வண நயந்து
வண்ண முற்றருச் சித்தது பன்னிரு வருடம். 44

தன்ற டத்தினிற் றீரமேற் றக்கசி ரிலிங்க
மொன்றை நாட்டியிவ் வணமருச் சித்தபி னொருநாள்
துன்று செஞ்சடைத் தேவனுந் தூயவெள் ளிபத்துக்
கன்று நற்றிரு வருள்செயத் தோன்றின னவனே. 45

தவள வெள்விடை மீதினிற் சயிலமா துடனே
பவள மேனியும் விரித்தசெஞ் சடாடவிப் பரப்புந்
துவளு மான்மறி யபயமுந் துலங்குமுந் நூலும்
புவன வாசிகள் போற்றிடத் தோன்றினன் புனிதன். 46

இந்த நீர்மைகண் டிபவர சின்பமிக் கிறைஞ்சி
பந்த மிக்கவர்க் கணுக்கரும் பனசைவாழ் பரம
நந்தி நாயக நாயினேற் கடைந்தவிப் புன்மை
சிந்தவே யருள் செய்திடுந் தேவதே வேசா. 47

என்று போற்றிசைத் திந்திர னிட்டசா பத்தை
பொன்ற வேயருள் செய்திடாய் புராரியே நினக்கு
மன்றன் மாவயி ராபதேச் சுரரென வழங்க
ஒன்று தீர்த்தமு மென்பெய ராகவே யுரைக்க. 48

யாவ ரேனுமென் றடம்படிந் தெழுந்திடி லவர்தம்
பாவ மும்பெரும் பழியுமே பாற்றிடென் றுரைக்க
மேவு மவ்வரந் தந்தன மென்றுமுன் றுலத்
தீவி லுற்றிடுஞ் செஞ்சடைத் தேவனு மறைந்தான். 49

என்று கூறிய நந்தியம் பகவனை யிறைஞ்சி
குன்றெ னுந்தவ முனிவர னுஞ்சனற் குமரன்
அன்று வெள்ளிபம் வானநா டடைந்ததுங் குலிசன்
நன்றி தென்றதும் மருளென நவின்றன னென்றுன். 50

அயிராவதச் சருக்கம் முற்றிற்று.

## நான்காவது இந்திரன் பூசித்த சருக்கம்

நான்ம ருப்பிபம் நண்ணிவெஞ் சாபமாம்
பான்மை யற்ற பரிசு பகர்ந்தனம்
தேன்ம லர்த்தரு நாட்டுறைத் தேவர்கள்
கோன ருச்சித்த கொள்கையைக் கூறுவாம். 1

மகபக திப்பெயர் மன்னன் றருக்குறும்
பகலி னிற்றரு நீழலிற் பண்ணவர்
புகலு நற்றவர் சூழ்தரப் புக்கவண்
மிகம கிழ்ந்திடுந் தானந்த வேலையில். 2

பனசை நாயகர் பாத சரோருகந்
தனைய ருச்சித்துச் சாபந் தனைத்தவிர்ந்
தனக மான வரசிபம் போந்தவன்
கனக முற்பதங் கண்டு பணிந்ததால். 3

அக்க ணத்தின் முனிவெழுந் தா றிநின்
றிக்க ணுற்றதி தேதென் றுளத்துன்னித்
தக்க ஞானத்திற் கண்டு தவத்திர்காள்
புக்க தன்மை புகலுவன் கேண்மினே. 4

தவள மேனியுந் தன்மருப் பீரிரண்
டுவள கத்தினு முற்றுயர் தோற்றமுந்
திவள மாமுகத் தேய்ந்தநற் செவ்வியுங்
கவள யானைக் கிவைவந்த காரணம். 5

எரியிதழ்ச்செவ் வாய்திறந்து விருந்தளிக்கட்
களிக்குநற வினிய செவ்வி
மரையிதழ்ச்செங் கபாடமுறுஞ் சினகரப்பண்
ணவன்குறைகள் மதித்து முன்ன
மொருதினமித் தேவர்களு மச்சுதனு
மியானுமற்றை யோரும் போந்தே
யிரசிதவெற் பினிலமலன் சேவடித்தா
மரையிறைஞ்சி யேத்தி நின்றேம்.

பைப்பணிநா யகனெங்கள் வரவறிந்து
திருப்பனந்தாட் பதியின் மேவிச்
செப்புறழு முலையுமையாட் கருண்ஞானம்
வழங்கினம்யாம் தேவர் வேந்தே
திப்பியஞ்சே ரத்தலத்தில் நம்மையருச்
சித்திடில்யாம் அருள்வோம் வேதன்
மைப்பரவைப் பெருஞ்சாப நீங்குமவ
ணேகிலென்ற மாற்றங் கேளா. 7

விடைகொடுவந் தயற்குரைப்ப வவன்பனசை
புகுந்துநவை வீயச் செய்த
வடைவதனை விடயமடு மகதியாழ்
முனியுரைக்க வாங்க ணெய்தி
கடமதவெள் ளிபந்தனது சாபமகற்
றியதென்று கழறிப் பின்னும்
மடலரியா சனத்திருக்கும் புருகூத
னிம்மாற்ற மறைய லுற்றான். 8

### வேறு

மைப்பொதிந் தனைய கூந்தல் மங்கைய ராசை கொண்டோர்
ஒப்புயர் வில்லா மேலா முணர்வினை யொருவி மண்ணில்
இப்புவி தனிலு நீதி யிழந்தவ மானமுற்று
செப்பமார் தவந்தா னங்கள் செய்தது மிழப்ப ரன்றே. 9

தவலறு வருண நான்குந் தத்தம வருணத் துற்ற
வுவமையின் மடந்தை யல்லால் உயர்ந்தவன் மூன்று மாதை
யவனிற்கீ ழோனி ரண்டை யதிற்கீழோ னொன்றை வேட்க
நவமிகு நாலோ டாறுங் கற்பென நவிலு நூல்கள். 10

இசைத்தவர் தம்மிற் கூடா திருந்திட லேகா தேசி
தெசத்துட னைந்தி ரேழெட் டாறெனுந் திதிக ளோணங்
நசிப்பிலா திரையே சென்ம மூன்றுநட் சத்திரங்கள்
வசித்திடு மாதத் தோற்றம் பகல்விதி பாத மற்றும். 11

பிறர்மனை கணிகை மற்றைப் பேதையர் தங்க ளோடு
முறுபவர்க் கில்ல றத்தி னுயர்ச்சியாண் டுண்டு மில்லை
முறைமயற் றுணர்வு மாய்ந்து முயக்கமிக் கழிவோர் வெய்ய
சிறையத னுலேழ் கோடி நிரயமுந் தினையா நிற்பர். 12

ஆகையா லிதுத னக்கே யதிபாவ மெனிலைங் தட்டு
வாகைவேய்ங் தறிவின் மிக்க மாதவர் தமக்கு வாய்த்த
பாகடு மொழியா டன்னைப் பற்றியா னிணைவி ழைச்சை
யோகையா லிழைத்த தோட மொன்றின முரைப்பக் கேண்மின்.

விறலுடை யசுரர் கோமான் விருத்திரா சுரனைக் கொன்ற
குறையதொன் றிவைக ணீங்கக் கோதகல் பனசை நாதன்
மறைமுடி வான எங்கள் மாதேவ னருள்வா னென்னைப்
பொறியிலி யெனவி கழ்ந்து விடுவனோ புரப்பா னென்றே. 14

## வேறு

பொன்னகரந் தனைநீங்கி நெடியவான்
வழிகடந்து போந்து வீருய்த்
தன்னிகராந் திருப்பனந்தா ளெல்லையில்வந்
திழிந்திறைஞ்சிச் சயில மீன்ற
அன்னமெழில் மலர்க்கரத்தா லழைத்தசத்தி
மாநதிகண் டதனின் மூழ்கி
பன்மலருங் கொணர்மினெனப் பரிசனரை
யருகழைத்துப் பகர்ந்தான் மன்னே. 15

பொருவினிலங் நதியதனின் மறைவிதியிற்
படிந்தாடி வெண்ணீ றக்கம்
பொருவிலணிந் துயர்ந்தபஞ்சாக் கரமநுவ
யீரயுதம் புகன்று மேகம்
மருவுதிருக் கோபுரமுன் பணிந்தெழுந்து
கரங்குவித்து வாய்த லூடு
பொருவரிய பேரன்பு தள்ள நுழைந்
துள்புகுந்து போற்றி நின்று. 16

உட்டடையிற் சென்றுபிர தக்கணநூ
றுடனிருநான் குவந்து சூழ்ந்து
நெட்டரவம் புனைசடில நாயகன்று
ளிணையுளத்தி னிலவச் சேர்த்து
மட்டறுமன் பொடுசுவட்டி னெலிசெவியிற்
ருக்காது வந்தி றைஞ்சி
சிட்டனைநந் தாலவனத் தேவனையா
யிரங்கண்ணுந் திளைப்பக் கண்டான். 17

### வேறு

விரிந்துள சிவாகம விதிப்படி வழாமல்
பரம்பிரமம் வேறுயிர் பகுத்திடுதல் வேறென்
றுரந்தக விரண்டென வுளத்தினி லுறுதே
தெரிந்தரிய சோகமது சித்திதர நின்றான். 18

அங்கிலைமை கண்டடிமை யானவர் விழைந்தே
மன்னுதிரு மஞ்சனநை வேத்தியமு மற்று
முன்னுமெவை யுந்தக முறைப்படி யளிக்க
பொன்னுல களித்தவனற் பூசைமிகச் செய்வான். 19

நறியபுகை தீபமுதல் நன்குற வளித்துச்
செறிவுதரு நாள்பல செலுத்துமவ னோர்நாள்
குறைகருதி யைம்பதிரு பானுறழ்வு கொண்ட
துறுவிழிக ணீர்பெருக வன்பொடு துதித்தான். 20

அக்கண மகிழ்ந்துவிடை. மீதமலை யோடு
முக்கணன் முராரிவிதி முன்பரவ விண்ணோர்
தொக்கவம ரேசவுன துன்பகல வின்னே
தக்கவை யுரைத்தியது தந்தருள்வ மென்றான். 21

## வேறு

துய்யமா தவர்க்கு வாய்த்த தொன்மனைக் கிழத்திமேல்
மையனீட வறிவு வீழ மதியிலேன் விழைந்ததும்
பொய்மையான விருத்தி ரன்றன் புரம்பொடித்த பாவமும்
நையஎற் கருள்க என்று நாகநாதன் வேண்டினான். 22

எந்தைநின் றனக்கு மிந்த வூரினுக்கு மென்பெயர்
தந்தளித்தி யென்று ரைக்கத் தாலமேவு நாயகன்
சிந்தைகூர்ந் தருள்கள் நல்கி சிற்பரத்தின் மேலதாய்
முந்தநின்ற சுயம்பு லிங்க மூர்த்தியிற் கலந்தனன். 23

ஏற்ற மிக்க விந்தி ரேசன் பனசைமேய எந்தையைப்
போற்றி யங்க ணிருந்து வைகிப் புராரி பால்வி டைகொடு
நாற்றி சைக்கு மியங்க லிப்ப நாகர் நின்று வாழ்த்திட
ஏற்ற மிக்கு சுவர்க்க மேகி யின்ப மோடி ருந்தனன். 24

என்று நந்தி தேவனன் கிசைத்த காதை யின்புற
வின்று நற்ச னற்குமார னின்ப மோடு கேட்டபின்
நன்று தாட கைக்கு நாதர் நான்முகனுங் காணொணா
துன்று பொன் முடிவளித்த தூய காதை யோதுவான். 25

இந்திரன் பூசித்த சருக்கம் முற்றிற்று.

## ஐந்தாவது தாடகை பூசித்த சருக்கம்

ஆடக மிலங்குநா டளிக்சு நாயகன்
நாடிவந் தித்தசீர் நவிற்றி னேமினித்
தோடவிழ் மாலையாற் றுலங்கு மீசனைத்
தாடகை யருச்சித்த தன்மை சாற்றுவாம். 1

கருவிட முளத்தினுங் கண்ணின் மீதினும்
மருவிட மரியகாத் திரத்தும் வைத்தவள்
வுருமிடி வெருக்கொள வுற்று ரைப்பவள்
செருவிடைத் தலைச்செயுந் திறத்தின் திண்ணியள். 2

பிள்ளையம் பருவவெண் பிறையெ யிற்றினள்
கொள்ளைகோண் டூன்றினுங் குடவ யிற்றினள்
கள்ளவெங் கூற்றுவன் வெருவுங் கண்ணினள்
உள்ளரும் புவியெலா முலவு தாளினள். 3

அரக்கர்தங் குலத்தில்வந் தவத ரித்துளாள்
வெருக்கொளத் தீயெழ விழிக்கும் பார்வையாள்
பெருத்தவா யிரங்கரிப் பெலத்தை யுற்றுளாள்
நெருப்படு மின்மலட் குதர நீர்மையாள். 4

பகர்துவர்ப் பங்கிமேற் படர்ந்த நெற்றியாள்
திகிரிதோள் பூதரஞ் சிவனு மாமுலை
யிகலர வல்குல்நீள் புழைக்கை யேகவா
னிகழக லடித்துணை நிலவு தாடகை. 5

நங்குலத் தலைமையு நண்ணு மில்லறத்
துங்கமு நடத்துவான் றூய பாலகன்
தங்குத லிலையெனிற் றங்கைச் செல்வமு
மிங்கித மகிழ்ச்சியு மெழிலும் வெற்றியும். 6

இருமைக்குந் துணைசெயு மிளவ லில்லையேல்
பெருமையிற் சிறந்துள பீடுங் கல்வியும்
உரிமையு மென்செயு முற்று நோக்கிலென்
றிருமைசே ரிறைவனை யிறைஞ்சி யேத்துவாள். 7

இம்மனை வாழ்வதி லிடுவ னங்கடான்
செம்மய தருந்துதல் தீய புன்புழு
நம்மிட மலகைதா னடித்து வாழிடம்
மம்மபூ ணென்பினை யணித லொக்குமால். 8

தொக்கவா யிரத்தின்மேற் றுறுமெட் டண்டமும்
பக்கமிக் காண்டனன் சூர பன்மன்மேல்
மிக்குறு தவத்தினல் மேவு நோன்பிழைத்
திக்குறை தீர்ப்பனென் றிசையக் கூறினள். 9

## வேறு

விற்போர்கண வனுநன்றென விடைநல்கலு மாங்கண்
மைப்பூசிய துறமுமெனும் வல்லாரணி யம்போந்
தெப்போது நெருங்குங்களி யேனம்புலி சீயம்
கைப்போதக மிகவுற்றமை கண்டார்வம தானுள். 10

தவமுற்செய வலியற்றவர் தரணித்தல மதனில்
பவமுற்றிழி தொழிலேக்கொடு பவமேபுரி வாரால்
அவமற்றிடு தவமேசெயில் அகிலத்துள வெல்லாம்
சிவனற்றிரு வருளால்வரு மிதுதிண்ணமென் ருேர்ந்தாள். 11

காரிற்பனி வேனிற்றகு காலத்தினி லடைவே
நாரத்துறு வெயின்மேலிரு நயனத்தை விழித்து
மாரப்படு மடுவிற்கள மாழத்தினி னின்றும்
வாரக்கினி நடுவைந்திடை வாடிப்புர ஞெந்தும். 12

அரிதிற்செயு மிவணற்றவ மருமாதவ ராசர்
ஒருவற்குமி தேலாதெவர் பதநத்திய துணரோம்
புரையற்றுள விதுவென்றிமை யவர்துன்படை போதில்
மரையிற்பொலி பவரோதிமம் வெரினுற்றவண் வந்தார். 13

பண்பிற்றிகழ் தவமென்பெற விரைவிற்பக ரென்ன
மண்பற்றிட வன்புற்றுவ ணங்கிப்புகல் கின்ருள்
திண்பெற்றுயர் தனையன்றனை யருள்வாயென வேதன்
பெண்புத்தியி ஞலோதினை பேதாயிது கேளாய். 14

## வேறு

நம்மாலீ தருளும்வகை யரிதுனக்கு
நண்ணும்வகை நவிற்று வாங்கேள்
கைம்மாவன் றுரித்தபிரான் றிருப்பனந்தா
ணுயகனீ கருதும் வண்ணம்
பொய்ம்மாய மறப்புதல்வன் றந்தருள்வான்
போயவணீ புனலுண் மூழ்கி
செம்மானம் புரைமேனி தேவனைநீ
யர்ச்சியெனத் தெருட்டு கின்ருன். 15

அவ்வுழையின் முறுக்குடைந்த தாமரையோ
னருளுகின்ற னரக்க மாதே
திவ்வியமாஞ் சோணுட்டிற் றிகழ்ந்துளதா
னங்கள்பல தீர்த்தப் பொன்னி
ஒவ்வியிரு பாலுலவ வுயர்தால
வனத்தின்வா ருணத்தை நோக்கி
நவ்வியமர் கரத்தண்ணல் நண்ணநா
யகிபூர்வ நண்ணி வாழ்வாள். 16

## வேறு

நெடியமறை முதலெழுத்தை நேருமானம் நின்றிடுமுச்
சிகரமுடன் நிலவுங் கோயில்
அடியதனி லிங்கிலையிற் றுலமேவு மைங்கரனு
மாட்சிபெற அமர்வான் மண்ணிப்
படியதனி லுத்தரமாய்ப் பாயுமென்றல் பாரினிடை
யிதற்குநிகர் பண்பின் மிக்க
நெடியதலம் வேறிலைநீ நேடியாங்கண் ணீண்டசடை
வேதியரை அர்ச்சியென்றான். 17

## வேறு

என்று நான்முகத் தண்ண லிசைத்ததும்
மன்றல் வார்குழற் றடகை மாண்புடன்
துன்று நாயகன் சொற்படித் தொன்முறை
நன்று சங்கற்ப நவின்று நடந்தனள். 18

அணங்க ளுளுத் தரத்தி லணைந்தபின்
றிணிந்த கோபுரச் சேவைசெய் தாயிடை
குணங்கள் மூன்றுங் குறித்திடு சாத்திகத்
திணங்கு நன்குண மாக்கி யிறைஞ்சினள். 19

இறைஞ்சி யங்கியல் போதி லெழிற்றடத்
துறுஞ்ச ரோருக மேயொரு தூளினின்
றறைந்த மாதவ மாற்றினே யென்னினும்
பிறங்க வென்பெறு தற்கென்று பேசினள். 20

இலகு பண்ணையு மிக்குங் கதலியும்
அலகில் சோலையு மாறும் வளைதவழ்ந்
துலவு மேன்மையு முற்ற பனசையின்
நிலைமை கண்டு நெடுநக ருற்றனள். 21

அண்ணல் வீதிகண் டன்பிற் பணிந்தெழுந்
தெண்ணி லாலயந் தோறு மிபமுகன்
வண்ண வேலன் வடுகன்சாத் தன்முதல்
நண்ணுந் தேவரை நாடி வணங்கினுள். 22

## வேறு

கோபு ரத்தினேர் குடக்கினிற் குணக்கினை நோக்கிச்
சாப மேருநா யகவெனச் சாற்றிநின் றிறைஞ்சி
தீப முற்றநன் மெழுகெனச் சிந்தையுள் ளுருகி
சோப மற்றிடு தொன்மையாம் அன்புமுன் தள்ள. 23

உண்ணு மைந்துபே ராயிரம் படைத்தவுத் தமனைப்
பெண்ணி னுக்கிரு பாகமுங் கொடுத்தபே ரருளைத்
தெண்ணி லாமதிச் செஞ்சடைத் தேவனைச் சிவனைக்
கண்ணி னுற்றிளைத் தார்வமாங் கடலிடைப் படிந்தாள். 24

ஆர்த்த நூல்விதிச் செய்கடன் முற்றிநின் றடவிற்
கூர்த்த நான்முகன் தீர்த்தத்தில் நன்குறக் குடைந்து
தீர்த்த மாந்திரு நீறுட னக்கமுஞ் சேர்த்து
சீர்த்தி மேவுபஞ் சாக்கர மனுவையுஞ் செபித்தாள். 25

புரிந்த சண்பகம் பாடலம் புன்னைபொற் கொன்றை
விரிந்த செவ்விதழ்த் தாமரை தண்கர வீரம்
பரந்த வெண்டுழாய்க் கூவிள மறுகுடன் பறித்து
புரிந்த சேடிய ரளித்திடப் பூசனை புரிவாள். 26

## வேறு

அறிவுக் கறிவாய் நிருமலமா
யனந்தா னந்த சின்மயமா
யிறுதி நடுவா தியவகன்ற
யிறையை மறையின் நிறைபொருளை
குறியுங் குணமுங் கடந்தானைக்
கோதில் பிரம புரத்தரசை
நெறியின் வலஞ்சூழ்ந் தாலயத்தி
னீடும் பணிகள் சிலசெய்தாள். 27

முற்று மெழில்சே ராலயங்கள்
முழுதுந் தருக்கா லலகிட்டுந்
தெற்றென் ருன்கோ மயங்கொண்டு
தெளிக்கு மிடங்க டனிற்றெளித்தும்
பற்ற மெழுகுந் தானங்கள்
பரிவா யெழிலின் மெழுகியுநெய்
துற்றி யுறப்பெய் தெவ்விடத்துந்
தூண்டா விளக்கிட் டினிதுவந்தாள். 28

சிறந்து விளங்குஞ் செஞ்சடைவே
தியர்வாழ் கெற்பக் கிரகமுதல்
மறிந்தெவ் விடத்து முலவிமிக
வன்மை பலவுஞ் செய்தெழிலி
யுறங்கும் பெரிய கோபுரமட்
டுவப்புற் றிரங்க வல்லியென
நிறைந்த கோலம் பலவன்ன
நிலையிற் றிகழப் புரிந்தனளால். 29

மருவப் பலபொற் பூந்தட்டு
வயங்கப் பரப்பிக் கந்தமலர்
திரளிற் சொரிந்து தொடரிண்டை
சேர்வை மாலை பணிமாலை
அரிதி லியற்று மாலையெலா
மமைத்து வேண்டுந் திரவியங்கள்
விரிவிற் சேர்த்து மஞ்சனங்கள்
மிகவுங் கொணரச் செய்வித்தாள். 30

வீரி முதலோர் புடைமருவ
வேதா கமங்கள் விதித்தபடி
யேரி னிலகு பிரணவமு
மிருமை சேர்க்கு மெழுத்தைந்துஞ்
சேரும் பீசத் துடனுறுந்
தெரிந்து தெளிந்து தன்னுளத்தி
லாரல் மூன்று மெரித்தபிரா
னடித்தா மரைகள் பணிந்தனளால். 31

இருமை சேரும் பூதமுத
லிலிங்க முதலா மைந்துசுத்தி
நிரையிற் புரிந்து விதிபிறழா
நிலையுற் றரிய வருக்கியங்கள்
தெரியத் தாபித் தேனையவுந்
திரியா தியற்றி யருவுருவப்
பரனைத் திருமஞ் சனமாட்டிப்
பயிலெட் டயில மினிதாட்டி. 32

அருங்கெவ் வியமே முதலாக
வாட்டுந் திரவி யங்களெலாம்
பொருந்த விதித்த முறையாட்டி
புகைநற் றீபப் பொலிவளித்து
விரிந்த திருவொற் றுடையினை
விளங்கச் சாத்திப் பட்டணிந்து
தெரிந்தா பரண வகையெல்லாந்
திகழத் தரித்தாள் மிகுமன்பால். 33

**வேறு**

அட்டவி தாற்சனை யாதி செய்தபின்
மட்டுலா மாலைக ளணிந்து வாய்த்தபொற்
றட்டிலேற் றவர்களுந் தயங்கு வில்வமுஞ்
சிட்டனு மத்திறற் றெரிந்து சாத்தினள். 34

புகலன மாதிதாம் பூல மந்தமாய்த்
திகழத்தா நிவேதனஞ் செய்து சோடசம்
அகமுறப் புகையொளி யாதி யும்புரிந்
திகலறப் போற்றினீ ரிருகண் வாரவே. 35

விழைவுறப் பணிந்தியாழ் மேவப் பண்ணமைத்
தெழுவகைச் சமங்களு மினிதி னேற்றியே
விழிபிறழ்ந் திலமணி மிடறு வீங்கில
வெழுமிசை யமுதெனக் கீதம் பாடினுள். 36

பரதசாத் திரங்களும் வியக்கப் பண்பினி
லிருமைசேர் சிலம்புகிண் கிணிக ளேங்கிட
வரிதினிற் பற்பல வவிந யத்துடன்
அரன்முனஞ் சதியெலா மமைய வாடினுள். 37

இவளினி மேலொரு பால னிவ்விறை
தவலற வளித்திடத் தக்க சூன்முதிர்ந்
துவகையி லியங்கல்போ லுற்று மாவலந்
திவளவே புரிந்தனள் திளைத்து வன்பினுல். 38

பொன்னிறை காணரும் புராரி யெம்பிரான்
சன்னிதி யடைந்தினி திறைஞ்சித் தக்கசீ
ருன்னிநின் றன்பினு லுருகி யேத்தினுள்
மன்னவிம் முறையின்மூ வருட மாற்றினுள். 39

**வேறு**

நேருறு காலத் தோர்தின முன்போல் நீராட்டி
யாரவி பூதியொ டக்க வடங்க ளணிந்தேபின்
ஞரண னேடுந் தாடலை மேவா நாமங்கள்
சீரெழு நாவி லுரைத்துச் சந்நிதி சேர்கின்ருள். 40

மட்டறு திரவிய மற்றுள யாவையு மகிழ்வோடு
கட்டிய செஞ்சடை வேதியர் பூசை கலந்தாற்ற
வுட்டெளி வுற்றபி டேகம தடைவி லுறச்செய்து
சிட்டனை யன்பின் றிறலுடைத் தாடகைத் திருமாது. 41

ஈர முலர்த்திக் கோதறு பட்டுக ளிசைவாகச்
சேர நிரைத்துய ராரமு மற்றுந் திகழ்வித்தே
வாரணி கொங்கைத் தாடகை தானெழில் வாரீசத்
தாரணி வோமென வன்பி லெடுத்திடு சமயத்தில். 42

### வேறு

தக்கவிம் முறையி லிடைவிடா தியற்றுந்
தாடகை யிலகுமா லயத்தின்
மிக்ககுற் றேவல் செய்துயர் கீதம்
விழைதரப் பாடிநின் றடைவிற்
றெருக்குற நடித்த செயலெலாஞ் சரியை
தூயவற் சனையது கிரியைப்
பக்கமுற் றுளத்தி லமையுநல் யோகம்
பகரரு மன்புநன் ஞானம். 43

ஆதலா லிந்தப் பத்திமூ வுலகு
மறிந்துய வேண்டுமென் றெண்ணி
தீதறு மன்பின் வரம்பினைக் காட்டத்
திருவுளத் தெண்ணியோ அறியோம்
நாதனும் செய்ய வேணியன் றுனுந்
நளினமா லிகையினை யெடுத்த
போதவள் உடையை நெகிழ்த்திட நின்று
போற்றுவாள் புண்ணியன் முன்பு. 44

நெகிழ்ந்தவப் படத்தை முழங்கையா லிடுக்கி
நிலவுமா லையையிரு கரத்தில்
வகைந்துறப் பிடித்து மாலையைக் குனிந்து
வள்ளலே யணிந்தரு ளென்று
முகுந்தனுக் கரிய மூலகா ரணனே
மூவெயி லெரித்ததிண் ணியனே
திகழ்ந்துயர் பனசைத் தேவதே வேச
சிவசிவ வெனநின்று புகன்று. 45

காத்திர மனைத்தும் வெயர்ப்புடன் கம்பங்
கதித்துறக் கரசர ணுதி
நாத்தழு தழுக்க வெரியினேர் மெழுகாய்
நண்ணநெஞ் சுருகநீ ரிரண்டு
நேத்திர மருவி போலவே பொழிய
நிலவுபூ சனைக்கிதோ ரிடுக்கண்
வாய்த்தவிப் பரிசா லுயிர்துறந் திடுவன்
வள்ளலே பனசைமா மணியே. 46

அரிதினே யடைந்து துயருறு கையினும்
ஐகளம் பிடித்துறு கையினும்
திருவினைப் பெற்றுச் செருக்குறு கையினுஞ்
செல்லரு மிடியதுற் றிடினு
மிருமினுந் தும்ம லியைந்துறு கையினு
மிடறிய போதினும் வெருவி
விரைவிலொன் றுறினு நினையல தறியேன்
விமலவென் றுருகியே நைந்தாள். 47

இருகர நீட்டிப் பிணையலை யணிந்தா
லியைந்துறு மறுவையோ சோருந்
தெரிவரு மறுவை சோரிலா சாரஞ்
சிதைந்திடு மன்னது சிதைந்தாடல்
புரியுமர்ச் சனைதா னிட்பல மாகும்
புகன்றது நிட்பல மானல்
அரியவென் விரதங் குலைந்திடுங் குலைந்தா
லாவிவைத் திருப்பனோ வருளாய். 48

சென்ற காலத்து நின்பத முளத்துஞ்
சிரத்தினுந் தரிக்கவென் வாக்கு
நின்றனைப் புகழ வென்னுடல் நினக்கே
நியமமிக் கடுந்தொழில் புரியத்
துன்றுமைம் புலனு றேகினு நின்றன்
சொரூபமே கண்டிட வருளாய்
யென்றனக் கிடுக்கண் நிகழ்ந்திடி லதுவு
மீசநின் பரமெனத் தொழுதாள். 49

அரக்கியா னெனினு மல்லவை செய்தற்
கஞ்சினேன் நம்பஎவ் வுயிரும்
வெருக்கொளத் திரியும் பாவியென் றாலும்
விடுவதுன் றெழிலல வமல
தருக்கிய வமரர் நடுங்கவே டயின்று
தகர்ந்தவெந் துயர்புரிந் தணுவு
மிரக்கமில் லவுணர் சூரபன் மனுக்கு
மிரங்கினா லாம்பத மளித்தாய். 50

இன்பிறை யுயிரு மடியனே னுடலு
மியங்கிநின் றடைந்தகற் பதுநான்
நன்குசத் தியமீ தாயினுமிந்த
நளினமா லிகைபழு தின்றி
முன்பய னறியா முடிவளைத் தடியேன்
வேண்டுமிம் மதுமலர் மாலே
அன்புறத் தரித்தி யென்றிரந் துனக்கே
யடைக்கல மடைக்கல மென்றாள். 51

## வேறு

உரைக்கரிய தழன்முகத்தி லுற்றவரக்
கெனவகநெஞ் சுடன்மற் றெல்லா
மிரக்கமிக நெகிழ்ந்தோட நாட்டநீ
ருகப்புலம்பி நிற்கும் போது
விரைக்கமலத் தவனறியா முடிவளைத்தார்
விரைமாலே மேவக் கொண்டார்
அரைக்கணமுந் தரியாது மலர்மாரி
பொழிந்தமர ரரவென் றார்த்தார். 52

அக்கணந்தன் னிடத்திரட்டி யெட்டுமலர்க்
கரமெழுந்த ததுவுங் கண்டாள்
செக்கர்மா லேப்பிறையுங் கங்கையுங்கொன்
றையுந்தரித்த செய்ய வேணி
நக்கனுயர் முடிவளைத்த தன்மையுங்கண்
டாள்காணுள் நாலா ருசை
மிக்கபர வசந்தெளிந்து தானேயுடுத்
தற்சனேயு மேவச் செய்தாள். 53

சங்கரவங கணவமல திகம்பரா
னந்தபர சமய மீரா
றெங்குநிறைந் தவரவர்க்குத் தக்கபடி
யிருந்துகதி யீந்தாட் கொள்வோய்
பொங்கரவம் மதிச்சடையாய் முடிவளைத்தா
யதுவுமன்றிப் பூசித் தேத்தக்
கங்கணசோ டசகரமு மளித்தனேகைம்
மாறடியேன் காணே னென்றாள். 54

கருணைபொழி யும்பரம திருப்பனந்தாட்
　　பதிமீதுங் கயிலை மீதும்
மிருமையக லடியவர்த மிதயமீ
　　தினுமிருந்த இறைவ போற்றி
அரியபொன் முடிவளைத்த ததுவு
　　மன்றி யெட்டிரட்டி யத்தமேவ
விரையவளித் தாய்தொடர்ந்த முற்பிறப்பிற்
　　செய்ததவ மேன்மை யாதோ. 55

இவ்வண்ணம் பன்முறைநின் றிரங்கியாற்
　　றுளாகி யிருகண் ணுல்நீர்
மைவரையி லருவியென மிகப்பொழிய
　　மெய்விதிர்ப்ப மனங்க ரைந்த
செவ்வியவன் போடிரட்டி யெட்டுமலர்க்
　　கரங்குவித்தாள் சிந்தை சேர்ந்த
எவ்வமகற் றிடக்கருதி யருட்கருணைக்
　　கடல்தடையற் றெழுந்த தன்றே. 56

## வேறு

விடையினிடந் திகழுமையும் வில்லமா ரெருக்கிதழிப்
படவரவ மறுகுகங்கை பான்மதிசேர் செஞ்சடையும்
பொடியணிபுண் டரநுதலும் பொருந்துதிரி நேத்திரமுங்
கடிதிறவா தமரர்களைக் காத்ததிரு மணிமிடறும். 57

நுவலரிய பொன்றிகழ்முந் நூல்புரளுந் திருமார்புங்
கவனமுழல் புலியினதட் கலையிலகுங் கவினிடையுந்
தவறிழைத்த வெங்நெருப்பிற் றுன்பிறந்து வந்தெதிர்த்து
நவைபுரியு முயலகனை நடுங்கமிதித் திடுதாளும். 58

இலங்கவிலிங் கத்திலிருந் தெழுந்தபோ தலர்மாரி
தலம்புதையத் தேவரெலாந் தாஞ்சொரிந்து கையிளைத்தார்
துலங்குமெழிற் றுடகைதான் துயரமகற் றருள்கவென
தலம்புதைய வீழ்ந்திறைஞ்சித் தனிநின்று போற்றுவாள். 59

ஒருவகையாந் தனியுணர்வாந் தடையிலிவர்ந் துருகிநின்று
பரசுவாள் அடியேனைப் பொருளாகப் பால்விடைமேல்
வருபரனே திருப்பனசை மாநகர்வாழ்ந் திடமுளைத்த
வரவமல வரும்புதல்வ ரளித்தருளெ ன்றடிபணிந்தாள். 60

என்றுருகித் துதிப்பவள்முன் னெதிர்முகமாய் நின்றுநமக்
கொன்றதலப் பலவிதமா யுஞற்றியபூ சனைமகிழ்ந்தோம்
நன்றுதரும் புத்திரரும் நல்கினமியாம் என்றருளி
துன்றிநினைந் துளவரமுங் கேளென்று ன்சோமதரன். 61

வேறு

அல்லு ருப்படைத் தோன்சரோ ருகப்பொகுட் டமர்ந்தோன்
புல்லு மிந்திரன் முனவர் எவரினும் போரில்
வெல்லு தற்கொணுப் பெலனுடன் மாயையின் மிக்க
வல்ல பங்கொளும் புதல்வரை யருளுதி வள்ளால். 62

நின்ற னக்குமிவ் வூர்க்குமென் பெயரது நிகழ
துன்று பொன்முடி வனைத்தவித் தோற்றமுங் கண்டோர்
நன்று பாலரைப் பெற்றிடு வரமுநல் கென்ன
யின்று தந்தன முன்பெய ரிலகவோர் தீர்த்தம். 63

கவினு றப்புரி யென்றுரைத் தண்ண லுங் கரந்தான்
சிவசி வாபரா பரவெனத் தொழுதுசிந் தித்து
நவமு றுஞ்சின கரத்தினுக் குத்தர நணுகி
தவல றத்திகழ் தடமொன்று கண்டனள் தையல். 64

அத்த டத்தினுக் கடுத்ததென் தீரமே லமைய
வித்த கச்சிவ சத்தியாம் வீரியென் பவளை
வைத்த ருச்சனை செய்தபின் குணதிசை வடுகச்
சித்தி தேவனைப் பூசித்து வணங்கியே சென்றாள். 65

வேறு

தாடகை தீர்த்தந் தன்னிற் றகைமையிற் படிந்தோர் தானம்
பாடுறப் புரிந்தோர் குன்றாப் பலன்மிக வடைந்தி ருப்பர்
பீடுடன் விளங்கு ஞானப் பெரியநா யகிக்குத் தென்பால்
நாடுமைங் கரனைக் கண்டோர் நவில்கணு திபரே யாவர். 66

அவ்விடந் தன்னி லாவு மன்னமு மறுவை தானும்
வவ்விடப் புவியு மற்றும் வழங்கினோர் நினைத்த தேய்வர்
திவ்விய ஞானம் வேண்டித் தேவதே வனுக்குத் தீபம்
எவ்வமற் றிலக விட்டா ரிரும்பெருஞ் செல்வந் துய்ப்பார். 67

மங்கள வாரந் தன்னில் மலைமக டனையற் சித்துத்
துங்கமா யலங்க ரித்து தூயபா யசங்க ளாதி
தங்கநை வேத்தி யங்கள் தானுறச் செய்தோ ரெல்லாம்
செங்கதிர் மதியம் போற்றச் சிவஞானம் பெற்றி ருப்பார். 68

மாசிமா தத்திற் பூர்வ பக்கத்தில் வயங்கும் வெள்ளி
நேசமாம் வாரந் தன்னில் நெய்யுமா வுடனே தேங்காய்
யாசறத் துருவி நல்ல சர்க்கரை யடைவிற் கூட்டி
தேசுட னிவேதிப் போர்க்குச் செல்வமா மகப்பே றுண்டாம். 69

சித்திரை முந்து பக்கஞ் சேர்ந்தபூ ரணையோ டன்பா
யொத்தசுக் கிரவா ரந்தா னுற்றநாள் வீரி யம்மைக்
கித்தலம் மகிழப் பூசை யியற்றினோ ரிருமையாய
வித்தகச் செல்வ மெய்தி மேனுல காள்வர் அன்றே. 70

பகர்ந்தவந் நாளிலேசற் பாத்திர மான பேர்க்கு
நிகழ்ந்தகோ தானஞ் செய்தோர் நிலவுகோ லோக மெய்தி
மிகுந்தபோ கங்கள் துய்த்து மேதினி தன்னிற் றோன்றித்
தகைந்தமெய்ஞ் ஞான முற்றுச் சாற்றரு முத்தி சேர்வர். 71

என்றுரை செய்த நந்தி யிணையடி தாழ்ந்து நின்று
நன்றுசால் சனற்கு மாரன் ஞானதா டகையின் பூசை
யின்றுகேட் டுய்ந்தோம் நாத வெழிற்பனந் தாளின் மேய
மின்றிகழ்சடையான்மேன்மைவிளம்புகவென்றுதாழ்ந்தான். 72

தாடகை பூசைச் சருக்கம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

## ஆருவது அகத்தியர் பூசைச் சருக்கம்

உயர்வு மொப்புமி லாதவன்பி
 னுமாப தீசரை வந்தனே
மயல றப்புரி தாட கைக்குள
 மான்மி யத்தைவ குத்தனம்
இயலி சைத்தனி நாட கத்தமி
 ழேற்ற முற்றவ கத்தியன்
வியனி லுற்றுயர் பூசை செய்தவி
 தங்க ளுஞ்சில வோதுவாம். 1

அரிய தாடகை பனசை யம்பதி
 யத்தர் சென்னிவ ளைத்தமை
தெரிய மூவுல கத்து மிவ்வுரை
 செல்ல வன்னது ணர்ந்தரும்
பொருவின் மாமுனி வோர்க ளோடும்
 பொருந்த ருங்குட முனிவரன்
விரைய வந்துயர் பனசை யம்பதி
 விமலர் செவ்வியை நோக்கினுன். 2

நோக்கி யெம்பர னிதுவென் னற்புத
 நோன்மை யென்று பணிந்தெழுந்
தூக்க முற்றுள முருகி யன்புட
 னேதி யற்சனை செய்திட
வாக்கு கார ண வாக மத்தினி
 லடைவி லோதும்வி திப்படி
நீக்க மற்றடை விற்பு ரிந்திட
 நேயம் வைத்தனன் தூயவன். 3

ஒத்த சிடர்க ளலகின் பன்மல
ருற்ற பத்திர மஞ்சனஞ்
சுத்த நீரினில் மூழ்கி யங்கவை
கொண்டு தன்புடை சூழ்வரச்
சத்தி மாநதி யாடி மீது
தரித்து நீறுயர் கண்டிகை
சித்த மார்தரு மந்தி ரங்கள்செ
பித்த னகுன்று முனிவரன். 4

**வேறு**

கருதரு நியாச மியற்றிய பின்னர்
கண்ணுதற் கெதிர்முக மாகப்
பரிவுமிக் கிருந்து பஞ்சபூ தத்தின்
பண்பென வுடலினை நினைந்தங்
கருவுருப் பரனை யந்தரி யாக
வர்ச்சனை யமைவுறப் புரிந்தே
உரைதரு விசேட வருக்கியங் கற்பித்
தொப்பிலா வாகம விதியால். 5

ஐவகைச் சுத்தி யமைத்துமஞ் சனமு
மல்கிய பின்னர்நன் மலரை
கைவகை கொண்டே உச்சிமேற் றாக்கிக்
காணரும் ஞானவா ரிதியைத்
தெய்விக வொளியை யஞ்சலி யுள்ளே
சேர்ந்ததாத் தியானஞ்செய் தெதிரே
மெய்வள ரிலிங்க மூர்த்தியில் வைத்து
மிக்கவா வாகனஞ் செய்தே. 6

அடைவினிற் சிவாச னுயவா தியதா
மட்டமந் திரத்தினு லெட்டு
வடுவினின் மலரை யுபயலிங் கத்தின்
மருவரு மன்பினுற் றாவிப்
படியகல் விசேட வருக்கிய முடியிற்
பண்புற வளித்தொளி தூப
முடிவின்மூ லத்தா வளித்தொரு மலரை
முடியினிற் றரித்தெலாங் கழித்து. 7

உரைதரு சுத்தோ தகமஞ் சுவன்ன
முரைத்தெண்ணெ மாமஞ்சள் நெல்லி
மருவரு பஞ்ச கௌவியம் பஞ்சா
மிருதநெய் இளவெந்நீர் வில்வந்
தருகுழம் பாட்டிப் பாளிதந் திமிர்ந்து
தக்கபால் தயிர்தேனிக் குறுநீர்
அரியபல் கனியின் சாரிள நீரும்
அபிடேக மருந்தவன் புரிந்தான். 8

ஆட்டும்போ தரிய முடியினி லொருபூ
வகன்றிடா திடையிடை யிலக
வாட்டருஞ் சுத்தோ தகந்தூப தீப
மனுவுரைத் தளித்தபின் மகிழ்வால்
நாட்டருங் குச்சுப் புல்லிணைச் சாத்தி
நாண்மல ரொன்றுமேற் றரித்து
மூட்டிய புனித வறலுடன் பதாகை
முத்திரை கொடுத்தபின் மன்னே. 9

மூலமஞ் சதனு லாட்டியஞ் சாறு
முதிர்மநு வால்மிக வாட்டி
கோலிய தாரை சகத்திர மாட்டிக்
குலவுசந் தனக்குழம் பாட்டிச்
சீலமார் கலச மஞ்சன மாட்டி
திருவொற்று டையைமிகச் சாத்தி
பாலினீ சான மாதியின் முண்ட
பங்கிநன் னியாசமே பண்ணி. 10

பங்கயா சனமும் பானிற வடிவும்
பலவனப் புற்றமுந் நாலும்
திங்களார் முடிக ளைந்துமைம் மூன்று
திரணய னங்களு மொருபான்
தங்குறு கரத்துச் சூலம்வச் சிரம்வாள்
தகுமழு வபயமே வலப்பால்
அங்கெழு நாகம் பாசமா மணிதீ
யங்குச மிடத்தினிற் கருதி. 11

இயற்றிய பின்னர் மூலத்தா லாடை
யெட்டுவி தார்ச்சனை மாலை
நயத்தணி பூணுந் தரித்தர னுமம்
நவின்றுபன் மலர்களுஞ் சாத்தி
யுயர்ச்சிபா யசமன் னுதியு மர்பித்
துரியவீ ரெட்டுப சாரம்
தியக்கமற் றளித்துப் பணிந்தெழுந் தன்பாற்
றெரிதரத் துதிக்கமே யினனால். 12

## வேறு

என்றுசில நாள்வழிபட் டேத்துமுனி வரன்காண
மன்றலுமை யருகிலுற மால்விடைமேற் பூதகணம்
வென்றியுடன் புடைசூழ மிகமலர்மா ரிகளமரர்
துன்றிவிடா தேபொழிய சோமசே கரனின்றான். 13

அக்கோலந் தனைக்கண்டா னடியற்ற மரம்போல்
நெக்கார்வத் துளமுருகி நீணிலத்திற் பணிந்தெழுந்து
திக்கார்ந்த மலையருவித் திறமென்ன விழிப்புனல்கள்
மிக்கோடப் பேராசை வேலையுற்றான் வேலதுய்த்தான். 14

தடையதுகா ணுதுமன்றான் தற்போத மாங்கரைகண்
டுடனேறிப் பரகருணை யுருவபுரா தனவமல
நடனவெனு முனிவரனை நாதன்மகிழ்ந் துன்பூசை
யடைவுவந்தோம் வேண்டுவன வறைதியென வருளினான்.

ஒப்புயர்வொன் றில்லாதோய் யுனையன்பிற் பணிந்தோருக்
கிப்படியே யிவ்விலிங்கத் திருந்துதமி ழியன்ஞானந்
தப்பறவே யளித்தியெனத் தந்தனமென் றிறைவியுடன்
அப்பமர்செஞ் சடையண்ண லகன்றனனென் றருள்
செய்தான். 16

அகத்தியர் பூசைச்சருக்கம் முற்றிற்று.

## ஏழாவது விண்டார்ச் சனைச் சருக்கம்

பணைமருப் பிரட்டைப் பகடுமே கத்தைப்
பார்த்தொலித் திடவது முழக்குற்
றணவதென் கொல்லோ வெனப்புகல் மலையத்
தருந்தவன் பனசைநா யகரை
யிணையிலாப் பூசை யியற்றிநல் லருளை
யேய்ந்தவா றறைந்தன னினிமேல்
பிணையல் வண்டுளப மாலருச் சித்த
பெற்றியைப் பேசுத லுற்றும். 1

அண்டகோ ளகையின் முகட்டர சிருக்கு
மனக்கொடி கலைக்கொடி யண்ணல்
விண்டல முழுதும் புரந்துறங் காத
விழியொரா யிரங்களே படைத்தோன்
றிண்டக நிறைந்த போகமிக் கடைந்து
செருக்கினிற் றிளைக்குமா வமரர்
ஒண்டிகழ் சுவாலா மாலையென் றொருபே
ருற்றயேழ் நாவுடைக் கடவுள். 2

அருட்கடன் பூண்டு புலக்குறும் பர்களை
யட்டுயர் வாகைவேய்ந் தென்று
மிரித்திடா தியக்கும் காறலை யேற்று
வயமது பெற்றமா யோகர்
தெரித்தணி மாமுன் பாயதோ ரெட்டுச்
செல்வமிக் கடைந்திடுஞ் சித்தர்
தருக்குகிம் புருடர் கின்னர ரியக்கர்
சாற்றரு மசுவனி தேவர். 3

குரவையிட் டார்க்கும் பெருங்குறட் பேழ்வாய்க்
கூன்பிடர் சுரிமுகச் சங்கம்
எரியெனத் திகழ்ந்த நாந்தகஞ் சாப
மிருங்கணைத் திகிரிதண் டிலகத்
திரிதரு கணங்க ளனைவருஞ் சூழச்
செய்யவ ளருகிலுற் றிருக்கப்
பொருவிகந் துயர்ந்த கவுத்துவ மார்பில்
பொலியமால் வீற்றினி திருந்தான். 4

அந்தவே ளெயினின் மகதயாழ் முனிவ
ஞசிகள் பேசியே யணையச்
சந்தமுற் றெழுந்தங் கருக்கிய மாதி
தந்துபொற் றவிசினி லிருத்திச்
சுந்தர மிகுத்த முகமனுற் றுரைத்துத்
தொடுகட லுடுத்தபூ வுலகின்
மைந்திறும் பூதுண் டெனிற்புகல் கென்ன
மாதவன் மாதவற் குரைப்பான். 5

நளினவா லயத்தின் மகிழுமிக் கடவுள்
நாடரும் பனசைமான் மியங்கள்
உளவெலா மரிய தாடகை யறிய
வுரைத்தலும் வேணவா வுடன்போய்த்
தெளிவுமீ தூர வுமாபதி சுரரைச்
சிறந்தவர்ச் சனைசெய்து முடியை
வளையவே புரிவித் தனளெனப் புகன்று
மருவுநா ரதமுனி யகன்றான். 6

கேட்டவக் கணத்தி லுடுக்கைகள் நெகிழக்
கேழ்நிற மணியுடல் வெயர்ப்ப
நாட்டநீ ரிழியக் கரசர ணங்கள்
நடுக்குற மனங்கரைந் தோடப்
பாட்டளி முரலுந் தண்டுழாய்ப் படலைப்
பண்ணவன் கருடன்மீ திவர்ந்து
கூட்டமிக் கிலக வானியாற் றிடையே
கோலமார் பனசைவந் துற்றான். 7

பணிலமார் கரத்தன் பனசைவந் தடைந்து
பார்ப்பதி மாநதி படிந்து
குணங்குறிக் கெட்டாப் பரனடி பணிந்து
குலவிய நிருதிதிக் கதனில்
அணைந்தொரு தடங்கண் டேவலர் தம்மை
அழைத்தலர் பத்திர மிகவுங்
கொணர்ந்திடு மென்ன வவரது புரியக்
கோதிலாப் பூசனை செய்வான். 8

### வேறு

சிட்டனுரை காரணவா கமவிதியாற் சிவார்ச்சனைக்கு
மட்டறுநை வேத்தியங்கள் வளர்புகைதீ பாதியினுல்
அட்டமூர்த் தியினிருதா ளகலாத வுளத்தோடும்
உட்டெளிவுற் றேத்திவரு மொருநாளி லுளமகிழ. 9

வந்துவிடை மீதிலரன் மலர்மழைவா னவர்பொழிய
நந்தநின்பூ சனைமகிழ்ந்தோ நண்ணுமுளத் தியைந்தவெலாந்
தந்தருள்வாங் கேட்டியெனத் தாமரைக்கண் ணுற்றிளைத்து
பைந்தருவிழ் பான்மையெனப் பணிந்தெழுந்து பரவினுன். 10

### வேறு

பேருயர் பிருந்தை யென்னும் பெண்ணலங் கருதி யந்த
நாரிதன் கொழுநன் மாய்ந்த நாளவன் வடிவ மெய்தி
நேருண ராது சென்று நெடியகற் பழித்தே னந்த
கோரமுற் றறிந்து ருத்துக் கோதையிவ் வாறு சூழ்ந்தாள். 11

மத்தனுய்ப் பிராந்த னுகி மதிமிக மாழ்கு வாயென்
றெத்தொரு வெய்ய சாப முரைத்தபின் றீயின் மாய்ந்தாள்
அத்தவித் தோடத் தோடி யடைந்தனன் அருள்வா யீச
யித்தலத் தியான்செய் பொய்கை யென்பெய ரிலங்க வேண்டும்

பஞ்சபா தகங்கள் பண்ணும் பாதக ரேனும் வஞ்ச
நெஞ்சினுற் பரதா ரத்தை நினைந்துளோ ரடைந்தோ ரேனும்
எஞ்சலில் தடத்தின் மூழ்கி யிறைவநின் றணைப்ப ணிந்தால்
கஞ்சனும் போற்ற மேலாங் கதியரு ளென்ருன் கண்ணன். 13

அவ்வரந் தந்தோ மென்றே யங்கண னிலிங்க ரூபச்
செவ்வியுற் றடைந்தான் விண்டு தென்மேற்கு மூலை மேவி
நவ்வியங் கரத்தி னுனை நாடிவீற் றிருந்தா னென்று
செவ்விதேர் நந்தி சொல்லத் திகழ்சனற் குமரன் கேட்டான். 14

**வேறு**

சோமுகா சூரன் மறைமுழு தினையுந்
துனுக்கென வெடுத்துத தியினிற்
போமள வையினின் மச்சரூ பமதாய்ப்
பொருதுவாங் கினனக மதித்தான்
ரேமறு சாத்தன் விழிபறித் தமலன்
றுணைப்பத மணிந்தபி னுணர்ந்து
தாமத மகல விலங்கையின் மச்சே
சனையருச் சனைமிகப் புரிந்தான். 15

மந்தர நிறுவிப் பாற்கட லமரர்
மருவவே கடைந்திடு ஞான்று
கந்தமார் பெலத்தி லாழ்தர வடிவங்
கமடமுற் றெடுத்தகங் கரித்தான்
தந்தியா னனத்தன் வதைத்துவென் னுேட்டைச்
சாத்தினன் தந்தைமார் பகத்தில்
அந்தமா நவைதா னகலவற் சனையங்
காற்றினுன் கச்சபா லயத்தில். 16

இரணியாக் கதன்ரு னுலகினைச் சுருட்டி
யிரும்பிலத் தொளித்திடும் போதில்
மருவுசூ கரமாய்ச் சென்றுகொண் டிரண்டு
மருப்பினுற் பழம்படி வைத்துத்
திரிபவன் செருக்கற் றிடக்குகன் பிடுங்கிச்
செப்புகோம் பரனுரத் தணிந்தான்
பரிவின்மா லுணர்ந்து பழமலை நாதர்
பாததா மரையருச் சித்தான். 17

இரணியன் சாயச் சிங்கத்தின் ரூப
மெடுத்தவ னிரத்தமுண் டடங்கா
மருளதுற் றுழல வீரனக் கணத்தில்
மருவருஞ் சரபரூ பமதாய்
வெருவவன் தட்டவ் வதளரன் பாலில்
விரைவில்வைத் திடமகிழ்ந் தணிந்தான்
பொருவரும் படம்போ லதுதணிந் திடுவான்
பூசனை யகோபிலத் திழைத்தான். 18

மறைவனத் தொளியுண் டாக்குமா வலிபால்
வாமன விப்பிர னுக
முறைமையி லடைந்து மூன்றடி யிரந்து
மூவுல களந்தறச் செருக்கி
சிறிதுநாட் டிரிந்தான் வடுகனங் கடைந்து
சிதைந்துவெந் நென்புதெண் டுரிமே
லறிவினுற் சட்டை யாய்க்கொள லுணர்ந்தங்
கருச்சனை காசியிற் புரிந்தான். 19

பிருகுசா பத்தை யேற்றருந் தவத்திற்
பிறழ்சம தக்கினி மகவாய்
மருவவந் தின்று ளிரேணுகா தேவி
வானத ரேகிய சித்தன்
உருவுகண் டருங்கற் பழிந்ததோர்ந் தவள்த
மொழியினுற் பரசுகொண் டுலகி
லரசரை யடர்த்தா னப்பழி தீர
வற்சனை பற்பதத் திழைத்தான். 20

தசரதன் றனய னுகவுற் பவித்துச்
சீதையைத் திருமணம் புரிந்து
வசையிலா ரணியத் தியன்றபோ தவளை
வல்லவவ் வரக்கனைச் சிதைத்த
நிசமதாம் வீர கத்திபின் றெடர
நிகழ்மண விராமலிங் கத்தை
நசையுற வருச்சித் திடரகன் றயோத்தி
நகரடைந் துலகளித் திருந்தான். 21

உரம்பெறு வாசு தேவர்தாந் தந்தை
யுரோகிணி தள்ளையாய்ச் செனித்து
வரம்பெறு நாஞ்சி லாம்படைக் கலத்தை
வன்மையிற் பிடித்துமா வசுரர்
தரம்பெறு மனைய வரம்பல புரிந்து
சமர்செயும் போதடல் செயித்து
திரம்பெறு யோக நிட்டையுற் றரனைத்
திகழ்துவ ரையிலருச் சித்தான். 22

திகழ்வசு தேவர் பாலக னுகித்
தேவகி யளிக்கவந் தாயர்
மகிழ்மனே வளர்ந்தா னிரைகளுய்ந் திடக்கோ
வர்த்தன கிரியின்மை தடுத்திட்
டிகலுமீ ரொன்பா னுளமர் புரிவித்
தெழிலுப மன்னிய ரிடத்திற்
றகுமுப தேசம் பெற்றருச் சனேகே
தாரநா தரைப்புரிந் திருந்தான். 23

என்றுநந் தீசர் வாஞ்சியம் வெண்கா
டிபவனம் பனசை முன்னுன
பொன்றுத லில்லாத் தலங்களி லரிமுன்
பூசனே புரிந்துட லெடுத்த
நன்றியை யடைந்தா னெனநவின் றருள
ஞானபோ தகச்சனற் குமரன்
துன்றிய சரித மின்னமு முளவேற்
சொல்லுக வென்றடி விழ்ந்தான். 24

விண்டார்ச்சனேச் சருக்கம் முற்றிற்று.

## எட்டாவது சூரியன் பூசித்த சருக்கம்

தருக்கும் வைனவ தேகியின் கழுத்தினிற் றரியார்
வெருக்கொ ளச்செலு மாதவன் சரித்திரம் விளம்பி
யிருட்குறும் பெறிந் தணுக்களின் கண்டுயி லெழுப்ப
வரைத்த வெங்கதிர்ப் பரப்புவோன் காதையை வகுப்பாம். 1

நனிசி றந்தபொன் னிழைத்தயூ பத்தறி நாட்டி
கனேயரித் துழாய் யலங்கலம் புயத்தணி கடவுள்
புனேவ ளத்தபொற் சரோருகப் பொருட்டில்வீற் றிருந்தோன்
தனேநி கர்த்தவிந் திரன்சுர ரனேவருஞ் சார. 2

மகம்பு ரிந்தனன் சிறுவிதி வள்ளலா ரிசைவா
லகங்க ளித்துமை சார்ந்திட வவமதித் திட்டான்
சகம்ப ழித்துள சாபமுந் தந்துமா மலேய
நகமு யர்த்தவன் மதலேயாய் நண்ணிநோன் பிழைத்தாள். 3

ஆன காதைநின் றிடவடல் வீரபத் திரனும்
வான வர்த்தொகு தியுங்கெட மகத்தையும் வாட்டி
தான வெங்கதிர்ப் பல்லையுந் தகர்த்திட வவனும்
ஈன மற்றிட யாங்குசெல் வோமென வெண்ணி. 4

தேர்ந்து பற்பல கருதிய செவ்வியி லொருத்தி
வார்ந்த வன்பினுல் அருச்சனை செயமுடி வளைத்த
தோர்ந்த றிந்திது வதிசய மென்றுதே ரூர்ந்து
போந்த டைந்தனன் பனசையி னெல்லையிற் பொருந்த. 5

கணிப்பி லன்பினுற் சூழ்ந்தியல் காலையிற் கமலன்
தணிப்பி லாதுளக் களிப்பினுற் கண்டபொற் றடத்திற்
குணக்கு மேவியோர் பொய்கையுண் டாக்கியே குலவ
வணக்க மோடுறும் பரிசனர்க் கிவையெலாம் வகுப்பான். 6

அலகி லாமலர்க் குயர்ந்தநீ லோற்பல மாதி
குலவி யுற்றபத் திரத்தினற் கூவிள முதலாய்
மலித ரப்பமு தகற்றினன் கவையெலா மருவச்
சலன மொன்றறக் கொடுவரு வீரெனச் சாற்றி. 7

## வேறு

தகும்பிரம புட்கரணித் தண்புனலி னிடைமூழ்கித்
திகழ்ந்துயர்ந்த கோபுரத்தைத் தூபியினைத் தெரிசித்துப்
புகுந்தமையா வன்புமுன்னே போகத்தான் பின்புபோய்
யகங்குளிரப் பணிந்தேத்தி யண்ணலார் முன்படைந்தான். 8

மரமசைய நிழலசையும் வண்ணமெனப் பரிசனர்கள்
கருதியரு கினிற்கண்ணுற் கையாற்சொல் லாலேவல்
அரிதினிற்பல் லோர்புரிய அலர்தொடையல் சிலர்வகுப்ப
பரிவினிற்சில் லோர்நைவே தனமுதலாம் படிசமைத்தார். 9

ஆரணமுஞ் சத்தியோ சாதவன் னத்துதித்த
காரணவா கமவிதியாற் காத்திரத்தைச் சிவமயமாய்
சீரணவும் படிபஞ்ச சுத்திகளும் செய்தமைத்து
நேரணவும் படியர்க்கிய பாத்தியமு நிருமித்து. 10

ஏரார நறுஞ்சுத்தோ தகமதிற்பி னெட்டயில
மாராது பலவர்க்க மானஞ்சுந் தேன்முதலா
நீராட்டி யிடையிடையே நீள்புகையொண் சுடர்முதலாச்
சீரார வபிடேகஞ் செய்துவந்தான் மெய்சிவந்தான். 11

சிவனுமம் பலவுரைத்துத் திகழ்ந்துயர்பன் மலர்சாத்தி
நவமாறப் பாறயிர்முப் பழமாதி நண்ணமிகுஞ்
சுவையாரப் பாவாடைப் போனகங்கள் தான்பரப்பித்
தவர்நாதர்க் கற்பித்தான் சகத்துவினேக் கற்பித்தான் 12

அஞ்சடுக்கும் தீபமுத லெட்டிரட்டி யாய்விளங்கும்
விஞ்சியநல் லுபசாரம் மேவுவித்து மெய்யுருகி
செஞ்சடைவே தியவடியேன் .செய்தசிவ அபராதம்
துஞ்சிடவே யருளுகெனத் தோத்திரங்கள் பலபுரிந்தான். 13

நின்றுருகிப் பணிந்தேத்து நீள்திவா கரன்முன்னே
வென்றிமழ விடையின்மேல் விமலனெழுந் தருள்கின்றான்
நன்றுதிவா கரவுனக்கு நல்குவரங் கேளென்னக்
குன்றவளுக் கருள்புரிந்த குழகனே யெனத்தாழ்ந்து. 14

நிலைமைபெறு மிவ்வூர்க்கும் நேடியபுட் கரணிக்குந்
தலைமைபெறு மென்பெயரே தந்தருள்நா ளுண்டுதொறும்
புலையகல மீன்மதியிற் புகுந்தருச்சித் திடவுமெனச்
சிலையுடையான் நன்கருளிச் சிவலிங்கத் துட்புகுந்தான். 15

வேறு

என்ற போதினில் நந்தியம் பகவனை யிறைஞ்சிக்
குன்றை யாள்பவன் மதலையாய்க் கோமள வல்லி
யன்று மாதவ மாற்றிய பின்னதன் மேலே
துன்று நற்சரி தந்தொகுத் தருள்கெனச் சொல்வான். 16

அரிய மாதவ மம்பிகை யியற்றலு மமலன்
பிரம சாரிபோல் வந்தவள் கருத்தினைப் பெரிதும்
மருவ வேயிகந் தானது கேட்டுள மறுகிப்
பெரிய யோகமே நிலையென்று நின்றனள் பிராட்டி. 17

செக்கர் மேனியம் பரனவள் கற்பினின் றிடத்தின்
மிக்க தன்மைகண் டுவந்துயர் மிடற்றினில் விடமு
மக்க மூன்றுநாற் புயத்துட னவ்விடைத் தோன்ற
பக்க முற்றுளம் வெள்கியே நின்றனள் பதைத்து. 18

அங்கு நின்றிலா தரன்கயி லாயமீ தடைந்தான்
மங்கை வந்துதன் பிதாவுட லுரைத்தபின் வள்ளல்
புங்க மாதவர் எழுவரை விடவவர் புகல
எங்கு லத்தினுக் கேற்றவ ரிவரென விசைந்தான். 19

எந்தை யோர்ந்தருண் மணத்தினுக் கிசைவெலா மியற்ற
வந்தி யாவரும் மாமணங் கண்டுவாழ் வடைந்தார்
புந்தி யார்சனற் குமரவென் றுரைத்தனன் புகழ்சேர்
இந்த நற்பிற விப்பய னடைந்ததென் றிருந்தான். 20

சூரியன் பூசித்த சருக்கம் முற்றிற்று.

## ஒன்பதாவது சந்திரன் பூசித்த சருக்கம்

ஒற்றை யாழியந் தேரினை யூர்பவன்
உற்ற ருச்சித்த காதை யுரைத்தனம்
சுற்று வெண்மதி தூய பனசையிற்
பற்றி யர்ச்சித்த பான்மைய தோதுவாம். 1

நம்மி டத்தினி னண்ணும் நவைகெட
மம்ம ருற்றவிண் டம்புயன் மாற்றுமோ
வம்ம நீக்குவ னன்னவர் தேடருஞ்
செம்ம லெந்தைச் சிவனெனத் தேறினன். 2

பூவி லுற்ற மனிதர்கள் பூசனை
மேவி யேபுரி யிலிங்கத்தின் மேன்மையாந்
தேவ ரர்ச்சித்த லிங்கஞ் சிறப்பதி
லோவ வாரிய லிங்க முயற்சியே. 3

அதினு யர்ச்சி யயன்பிர திட்டைதா
முதிரு மன்னதின் விண்டு முயற்சியி
யிதம தாய்வழி பட்ட விலிங்கமே
விதியின் மேவு சுயம்பதின் மிக்கதே. 4

இச்சு யம்புவு மேற்ற தலந்தனிற்
பச்சி மத்தினைப் பார்த்த தலமிக
இச்சை யாவு மளித்திடு மென்னவே
நச்சி வெண்கதி ரோன்சென்று நண்ணினன். 5

ஆகை யாற்றலந் தீர்த்த மமலமாந்
நாக நாதரு மேவு நலத்தினல்
சேக ரத்திற் றிகழும் பனசையே
வோகை மிக்குற வுன்னிய நெஞ்சமே. 6

குறுகி னுலத் தலத்திற் குறையெலாஞ்
சிறுகு மென்றவண் சென்றுவீ சானத்தின்
நிறைபு னற்றட நின்மித்து மூழ்கியே
அறையும் பூதியுங் கண்டியு மணிந்துபின். 7

திரவி யம்பல சேர்த்துய ரேவலர்
விரைவி லெய்தி யளிப்ப விமலனை
யரிய காரண வாகமஞ் சொன்முறை
பொருவி லாசையிற் பூசை புரிந்தனன். 8

**வேறு**

மந்திரத்திற் றந்திரத்திற் றிரவியத்தில் வருங்குற்ற
நந்திநா யகவுளவேல் நாயினேன் பிழைபொறுத்தாள்
சிந்தைமகிழ்ந் தெனச்சின்னுள் முட்டாது செய்துவந்தான்
சந்தமுறத் தோத்திரங்கள் பற்பலவுஞ் சாற்றினன். 9

என்றுநீர் மையிலேத்து மிந்துமுனம் விடைமீதிற்
கொன்றைவே ணியனணுகிக் கூறுவா னுன்பூசை
நன்றுநீ கேட்டவர நல்குவா முரைத்தியெனத்
துன்றுபே ராசையினல் நேர்நின்று சொல்லுவான். 10

மறைவிதியிற் முன்வரைந்த மகளிர்தமை விலக்குகளோர்ந்
துறுவதுநன் றல்லாத பொதுமகளி ருழையின்பம்
பெறமருவல் தோடமதிற் பிறர்தாரந் தனைவிரும்பல்
அறையரிய தோடமதிற் குருபன்னி யதிற்றேடம். 11

பகுமிப்பா தகந்தனக்குப் பரிகாரந் தானில்லை
மிகுதியிதற் கெவ்வண்ண மகலுமென மெய்நடுங்கி
அகமெலிந்தே னருட்கடலே தீர்த்தியான் கண்டபொய்கை
தகுதியிலென் பெயராகத் தந்தருள்வா யதிற்படிந்தோர். 12

இப்பெரும்பா தகநீங்க வருடியெனத் தான்பணிந்தான்
அப்படியே தந்தனமென் றமலனந்தர்க் கதமானன்
துப்பமருஞ் சனற்குமர வென்றருளாற் றெகுத்துரைத்தான்
ஒப்புயர்வொன் றில்லாத வுயர்நந்தி பதம்பணிந்தான். 13

சந்திரன் பூசித்த சருக்கம் முற்றிற்று.

## பத்தாவது ஆதி சேடன் பூசித்த சருக்கம்

நனியமுதத் துளிமாரி யொழுகமிகு
நள்ளிருளை நக்கிவானி
லினியதூண் டாவிளக்கிட் டதுபோல்
விளங்குமதி யெழிற்பனந்தாட்
புனிதனடி பணிந்தாசான் புகன்றபழி
நீக்கியதைப் புகன்றேநாவி
னுனிபுரட்டு விடப்புழைப்பற் றிறற்சேடன்
பூசித்த நோன்மைசொல்வாம் 1

பொருவில்கொடு முடிகள்பல வடர்பசும்பொன்
மேருவினைப் பூளை போல
முரணறவந் தெடுத்தெறியும் வாயுவினே
டன்றுமெய்ச்சூள் முடித்து வென்றேன்
நிரையுடைய வாயிரம்பைத் தலையிருக்க
வொருதலையால் நிலங்க ளியாவுந்
திரிவதக லப்பரிப்போ னுகலோ
கத்தரசு செலுத்து மன்னன். 2

ஊழிகற்ப முகமாண்டு மதிபக்க
நாட்கடிகை யுதய பாநு
நீழலுறு முயர்கால சக்கரமே
சுழற்றிவிடு மயுத நான்கு
மாழ்விலுய ரெண்ணுன்கா யிரவருட
மேகலியு மடைவின் மேவுங்
கேழிரட்டித் துவாபரமு மூன்றுதிரே
தகுநான்கு கிரேத முந்தான். 3

இருபானேந் தலையிலிட்ட வொருநூறு
சதிரியுக மியைந்தாற் போதற்
கொருநாளாம் முறையிலாண் டொருபானிற்
பெருக்கியபத் துற்ற காலே
வருவேத னெழிவனந்த மலரோனு
மொருகோடி மாய்ந்தால் மாற்குத்
தருமோர்நா ளரிகோடி யிறக்கில்முடி
துளக்குமுமை தருக்கு நேரம். 4

கருதுகிரே தந்திரே தந்துவா
பரங்கொடிய கலியு கந்தான்
தருமநாற் கால்முக்கா லிருகாலோ
டொருகாலுந் தகைந்து செல்லும்
நிரைநிரையிற் கலியுகங்கா லதிற்றேய்ந்து
நாடோறு நிகழு மாற்றுல்
திருமறையோர் மறைபயிலார் சந்திவந்
தனைகாயத் திரியுஞ் செய்யார். 5

மநுமுறையிற் கோனடத்தார் பொருள்வெஃகிக்
குடியலைப்பர் வருபோர்க் கஞ்சித்
துனியுறுவா ரறம்பேணுர் அயல்நாட்டுச்
சொல்லரசர் சூழ்ச்சி யாலே
நனியாள்வார் அறிவிலார் அமைச்சரென
நண்ணுவார் நலமே செய்யார்
இனியநடுத் தரமிலார் வசியர்வட்டி
மிகவாங்கி யிதமே பேசார். 6

ஏதமிலாள் தனைத்துறப்பார் அஃதுளாள்
தனைத்துறவார் இரக்க மில்லார்
மாதவரைப் பேணுமல் மற்றவர்க்கே
யிடர்செய்வர் வஞ்சஞ் செய்வர்
கோதறுகற் பினைப்பிரிப்பர் கொழுநனுக்குப்
பொய்யுரைப்பர் குலத்திற் கொண்ட
மாதிருக்க வயல்விழைவார் கலியுகந்தான்
செய்விக்கு மகிமை தானே. 7

பசுமறையோ ரரிவையர்புன் குழவிகளை
வதைத்திடுவர் படிறே சொல்வர்
நசையிலுறு நட்பினுக்கு வஞ்சகமே
யிழைத்திடுவர் நடுவொன் றில்லார்
நிசமறையோ ரடியவர்தம் பொருள்கவர்வ
ரன்னவரை நிந்தை செய்வார்
இசைகன்னி நோன்பழிப்பர் கூலிகொடார்
கலியுகத்தி னியற்கை தானே. 8

தேவர்க்காம் பூமுடிப்பார் காரியத்தில்
நட்டுப்பின் றீமை செய்வார்
பாவமுறும் பொருள்வெஃகித் தருமத்தை
யிகழ்ந்திடுவார் பதிநூல் கல்லார்
மேவத்தான் கற்றபடி பிறர்க்குரையார்
குருவுக்குத் துரோகம் செய்வார்
ஆவத்தி லுயிர்க்கிரங்கார் சொக்கிடுவார்
கலியுகத்தி னடைவு தானே. 9

விருந்துபுறத் தினிலிருக்கத் தாமுண்பார்
பொருள்கொண்டு வித்தை சொல்வார்
பொருந்துபெண்டிர் புத்திரரை விற்றிடுவா
ரறம்பழிப்பார் புகழைத் தேடார்
அருந்தவநற் றேசிகரை யவமதிப்பா
ரறிவிலா வாசான் றன்னை
வருந்தியழைத் துபசரிப்பார் பொருள்கொடார்
கலிகால வன்மை தானே. 10

அறம்பொருளின் பம்விட்டை யறியாத
வசடர்சந்நி யாசி யாகி
சிறந்தபெருங் கோயின்மட வதிகாரச்
சிறப்படைந்து தீமை செய்வார்
உறுங்கீழோர் மேற்றொழிலு மேலோர்கீழ்த்
தொழிலுமே யுழற்று வார்கள்
பிறர்பொருளைக் கொள்ளைகொள்வார் தீயிடுவார்
கலியுகத்தின் பெற்றி தானே. 11

தன்பாவம் போக்குதற்குக் கொடுப்பதனை
வாங்குவார் தர்க்கஞ் சொல்வார்
இன்பார்ந்த மாதவருக் கருத்தார்புத்
தகம்விற்பா ரெருத்திற் பாரம்
வன்பாக வேற்றுவார் வேசையர்க்கே
பொருள்கொடுப்பார் மாதவர்க்கே
இன்பாகக் கைவிரிப்பார் வெறுத்திடுவார்
கலியுகத்தி னியற்கை தானே. 12

சுற்றத்தை யறவிடுவார் கடும்பகலிற்
கூடுவார் சுரைமீன் விற்பார்
உற்றதோர் பிறனிலத்தைப் பறித்திடுவார்
உயர்ந்தோரை உதா சனிப்பார்
பற்றரிய தபசியாற் படுதுயர்தன்
றுயர்போலப் பாரா ரியார்க்குங்
குற்றமிழைத் திடமடிப்பார் கொடுமைசெய்வார்
கலியுகத்தின் கூறு பாடே. 13

ஆகையால் பசுவிடத்திற் பால்பொய்க்கும்
இக்கினிற்சா றறவும் பொய்க்கும்
வேகநோய்க் கிடுமருந்தும் மிகப்பொய்க்கும்
மாரிபொய்க்கும் விளைவும் பொய்க்கும்
தாகமுறு நிட்டைபொய்க்குந் தகுசகுனந்
தான்பொய்க்குஞ் சாபம் பொய்க்கும்
வாகடம் பொய்க்கும் பொருவில்
மந்திரம்பொய்க் குங்கலியின் வரவுதானே. 14

## வேறு

பாவ மேமிகப் பரம்பலாற் பூமியாம் பாரம்
ஓவில் நந்தலே சுமப்பரி திச்சுமை யூன
மாவ தெவ்வகை யென்றுளத் துன்னிநின் றமலன்
சேவ டிக்கணி லற்சனே செய்திடிற் றீரும். 15

என்று பற்பல கருதிநின் றெத்தலந் தன்னிற்
சென்று பூசனே புரிந்திடி லெளிதினிற் சுமக்க
இன்று நல்வரந் தந்தருள் மூர்த்தியா ரென்றே
யொன்ற நெஞ்சினி லோர்ந்தன னுணர்வினிற் பெரியோன். 16

பயன்பு விக்கணு ருயிரெலா முய்ந்திடப் பரிவால்
றயங்கு மாதுமைக் கருண்மொழி தந்தவன் பனசை
சுயம்பு நாயகன் றுரிசற முன்னொரு நாளில்
அயன்ற னக்கரு ளாதியெற் கருள்வனென் றடைந்தான். 17

அடைந்து பச்சிமத் தொருதடங் கண்டதி லருத்தி
மிடைந்து றப்படிந் துயர்ந்தவெண் ணீறுடன் விளங்கி
யிடந்தி கழ்ந்துமை யாளொடு மிருந்தவே தியனே
படர்ந்து பூசனே புரிந்துபின் போற்றுவன் பலகால். 18

மன்று ளாடிய பராபர வள்ளலே போற்றி
யென்ற போதினி லிடபமீ தினிலுமை யுடனே
நின்று சேடனே பூசனே யுவந்தனம் நினேத்த
தின்று கேளென வருளினன் சேடனு மிசைப்பான். 19

பரம விச்சுமை யெளிதினிற் பரிக்கவும் நினக்கும்
புரித னக்குமிப் புட்கர ணிக்குமென் பெயரே
மருவு மித்தரா தலத்தினில் வழங்கவுந் தினம்யான்
விரைவில் வரும்பில மூலமா பிலமென விளங்க. 20

தருதி யன்பறி வருளிலா வெய்யபா தகரும்
விரைய நின்சபை புகுந்துசே வித்தன ராகில்
இரசி தப்பொருப் பமர்ந்துற வருளுவா யென்றுன்
அரவ தந்தன மென்றிலிங் கத்தினி லடைந்தான். 21

பன்ன கத்தர சனுமிகப் பணிந்துபன் னுளா
யன்ன வாறருச் சித்துதன் னிருப்பிடத் தடைந்தான்
மன்ன வென்றநங் கீசரை மகிழ்சனற் குமரன்
இன்னு மேலுள காதையெற் கருளென விசைப்பான். 22

ஆதிசேடன் பூசித்த சருக்கம் முற்றிற்று.

## பதினொன்றுவது நாககன்னி பூசித்த சருக்கம்

விடக்கருஞ் சேறு பாயும் வெள்ளெயிற் றரவ வேந்தன்
தடுக்கரும் பூசை செய்த தன்மைசாற் றினமற் றிப்பால்
படப்பணி நாக கன்னி பனசைநா யகனை யன்பின்
அடித்தல மருச்சித் தேத்தி யடைந்தபே றதனைச் சொல்வாம். 1

பத்துநூ றடுத்துச் சென்னிப் பணிமணி வெயிலெ றிப்பத்
துத்திகொள் பணவ னந்தன் தொக்கவா சுகிகார்க் கோடன்
சத்துவ முடைய பத்மன் தட்சகன் குளிகன் சங்கன்
ஒத்தமா பத்மன் சூழ வொறுத்தது நாக லோகம். 2

முன்னமோர் கற்பந் தன்னில் முதிர்மகா கற்பந் தன்னிற்
சொன்னவவ் வுலகிற் செங்கோல் தொன்முறை நடாத்து கின்ற
மன்னன்வா சுகிதான் பெற்ற மகளெழிற் சுமதி யென்னுங்
கன்னிகை பருவ மெய்திக் களிப்புட னிருக்கு நாளில். 3

பணந்திகழ் வேந்த னுசை பரிப்பவன் றன்கு மாரன்
மணம்பெற வேண்டித் தூதர் வரவிடுத் தனனன் னுர்கள்
அணைந்துவா சுகிபாற் சென்றங் கணைதலு மிகம கிழ்ந்தங்
கிணங்கிங்ல் விருந்து வந்தோர்க் கியையவுறப் புரிந்த வேல்வை. 4

கோடுகொண் டெழுந்து விம்மிக் குங்குமச் சேறு தோய்ந்து
வாடுமின் மருங்குல் தேய்ந்து வருந்திடப் பருத்த கொங்கைப்
பீடுயர் நாக கன்னிப் பிதாவினை யுருத்து வேறோர்
சூடக மிழைத்த சோதி வேதிகை யதனிற் சென்றுள். 5

இருபத நீட்டிப் பூமே லிணைந்தொரு பூவைத் தென்ன
மருவுமா னனத்தி லங்கை வைத்துநீர் பெருகக் கண்ணுற்
கருமணற் கொழித்தல் போன்ற கவின்குழல் விரித்துத் திங்கள்
அரைபொரு நுதற்செந் தூர மழித்துவெய் துயிர்த்து நொந்து. 6

கிடக்குமன் னவளைக் கண்டு கேழுநல் லிகுளை மார்கள்
மடப்பமிக் குடைய வன்னை மலரடி தாழ்ந்து ரைத்தார்
தடுக்கருந் துன்ப மெய்திச் சார்ந்தெழின் மகளே யுன்பால்
அடுத்தவா றுரையென் றேத வாம்பல்செங் கதிர்முன் போல. 7

வாயினைத் திறவாள் தோன்று மதியமுன் வனசம் போல
தூயவத் திரம்மு கிழ்த்து துன்பமிக் கடைந்தாள் சொல்வாள்
நாயகன் எனக்கு வேறே நண்ணுவான் அறியா துற்றீர்
ஏயவென் றந்தை தன்னை யிங்கழை யென்ற காலை. 8

திட்பமா யுணர்த்த வந்துன் சிந்தனை மொழியா யென்னப்
பெட்பினு லென்னை நீவிர் பெறுதல்நுஞ் செயலே யல்ல
நட்பிலும் பானுன் வந்து நண்ணவுங் கூடுமோ தான்
வட்கலொன் றில்லா ஈசன் வருவிக்கு மகிமை யோரீர். 9

சகத்திரம் பாவ முற்றித் தகுபெண்ணுய்ப் பிறக்க வேணும்
அகத்திலா யிரந்திங் குற்ருல் அறிவிலான் பாரி யாகும்
வகுத்தவா யிரங்குற் றந்தான் வந்திடிற் கணிகை யாகும்
மிகத்ததா யிரங்கொண் டுற்ரு லிளமையிற் கைமை யாகும். 10

இவ்வண்ண மருவா தேநா னிடருட லொழியுங் காறுந்
திவ்விய நோன்பு முற்றச் செய்வனுங் கோத்தி ரங்கள்
பௌவமாந் துயர்க ணீங்கிப் பலபல போகந் துய்த்தே
அவ்விய மில்லா ஞான மணுகுதற் கென்று சொன்னுள். 11

ஈதுகேட் டன்னை தந்தை யிதயத்திற் கிலேச மெய்தி
மாதுகேள் மடமை யுற்ருய் வையகத் தியற்கை நீங்கி
யோதுதல் முறைமை யல்ல வுமையிரு நாழி னெற்கொண்
டேதமில் இல்லறத்தி னெய்தினு ளுணர்தி யென்ருன். 12

வதுவையின் காரி யத்தால் வந்தமர் சுற்றத் தோருக்
கிதமொடப் படியா கட்டு மேலென விளம்பி விட்டான்
கதிதவ மென்று மங்கை கங்குலிற் றுயிலுங் காலைத்
திதமுறு கனவு கண்டு திடுக்கென விழித்தா ளன்றே. 13

விழித்தபின் ருதைக் கீது விளம்புவாள் விடையோன் வந்து
செழித்தபுன் முறுவல் நங்காய் செய்தநின் பூசை கொண்டோம்
வழுத்திடும் பனசை யென்னு மாநக ரதனிற் சார்ந்து
மொழித்தவ ருதே யெய்தி முற்றுநின் பூசை செய்வாய். 14

என்றுரைத் தரிய தந்தை யிணையடி தாழ்ந்து சொல்ல
ஒன்றுமே மறுத்துப் பேசா துயர்விடை யீந்தான் மீண்டு
மன்றலா ரறிவின் மிக்க மடந்தைமார் தம்மைக் கூட்டி
சென்றுநற் பனந்தாண் மேவச் செயும்வழி யென்று கூறி. 15

பிலநெறி தன்னைக் காட்டிப் பெட்புட னேகி மீண்டு
நலமிக வம்மி னென்று நன்னரின் வாழ்த்திப் போனான்
மலைவில்நா யகர்தா ளுன்னி மன்னுபா தலம்விட் டேக
இலகிய கூபந் தன்னி லெழுந்தனள் நாக கன்னி. 16

## வேறு

எழுந்தவள்தா நாககன்னி யெழிற்பனந்தாள் மான்மியங்கள்
தழைந்திலகு மாதவத்தோர் சாற்றுவதுந் தற்பணிகள்
அழிந்திடுகண் புனல்பொழிய வமலநா யகர்சபையில்
விழைந்துதுதிப் பதுங்கேட்டாள் வேணவாக் கடல்படிந்தாள். 17

பெரியநா யகிகோட்டம் பச்சிமத்திற் பிறங்கிமிகக்
கருணைபொழி வதுங்கண்டாள் காசினிக்கெ லாந்தாழ்ந்து
தரையினிற்பெண் மடமையுறத் தான்செனித்து மித்தலத்தில்
வரவென்னத் தவஞ்செய்தேன் எனக்கருதி மகிழ்ந்தனளால். 18

பனசைமான் மியங்கேட்டோம் பார்ப்பதிநான் முகத்தண்ணல்
தனைநிகர்வெள் ளிபமகவான் ருடகைதென் மலைமுனிமால்
கனையிருள்சிப் பவன்மதியங் கதிர்மணிப்பைத் தலைச்சேடன்
அனைவரும்பூ சிக்கவரம் அவரவர்வேண் டியதளித்தார். 19

ஆகையினு னமக்கொப்பா மழகறிவுற் றரசனுமாய்
ஓகையிலோர் கொழுநன்வர வேண்டுமென வுளத்தமைத்து
பாகடுசொல் நாககன்னி பார்ப்பதிதீர்த் தத்தணுகி
தாகமுடன் பணிந்துவெண்ணீ றக்கவடந் தகவணிந்து. 20



நாககன்னிகை தீர்த்தம்



தலவிருக்ஷம் (பனை)

எண்டருநல் லெழுத்தஞ்சு மிசைத்துரிய கடன்களெலாம்
பண்டுணர்தன் மையிற்புரிந்து பகர்ந்தசின கரத்தேகி
மண்டலியிற் சூழ்ந்தரனை வலங்கொண்டு மகிழ்ந்தேத்தி
திண்டருநல் லாண்டமத வேழத்தைச் சென்றேத்தி. 21

தருக்குடனத் திரமாதி மநுவான்மஞ் சனக்குடத்தை
யருச்சனைசெய் தேசோகம் பாவித்தன் பாகநின்று
முருக்கிமன விருத்தியினை முறையினிற்சுத் தோதகத்தை
மருக்கமலத் தயற்கரிதாய் வளருமுடி மீதாட்டி. 22

பற்பலநை வேத்தியங்கள் பண்பொடுசெய் தாதரவிற்
சொற்பயிலு முபசார மீந்துமிகு துதிசெய்து
பொற்பினிற்சூழ்ந் திறைஞ்சியன்பிற் பொருவருமாச் சிரமமதி
லப்பொழுதிற் சேடியர்க ளருகிலுற வேயணைவாள். 23

## வேறு

வயங்குறு தேச முத்தரத் துதித்தோன்
மநுகுலத் துதித்தறக் கடவுள்
இயங்குதல் போலச் சரித்தருள் வீரம்
எழில்நல மன்புநற் குணங்கள்
வியன்றரப் படைத்து மேவலர் பணிந்து
வெறுக்கைக ளளந்துபின் சூழச்
செயந்தருந் தானை முதலிய தொடரத்
தீர்த்தயாத் திரையினிற் சென்றான். 24

புகழ்திரு நாகேச் சுரந்திருக் குடந்தை
பொற்புறு மருதவா ரணியம்
திகழ்தர விறைஞ்சி யமைச்சர்கள் சூழச்
சித்தமிக் குவந்துசெல் காலை
நிகழுமா கும்ப முனிவரன் பனசை
நிமலனைத் தொழுதுதென் மலைக்கு
மகிழ்வுட னணையக் கண்டுதாள் வணங்கி
மலர்க்கரங் கூப்பிநின் றனனால். 25

அந்தவே லையினில் முனியுளக் கண்ணி
லாய்ந்துதா னேக்கிமன் னவநீ
சந்தநாற் சம்பத் துறவுளத் துன்னிச்
சரித்தனை யன்னவை நினக்கு
வந்திட வுரைப்பாங் கேட்டிநற் றூல
வனத்துநா யகர்தமைக் கண்டோ
ரிந்நால் வகையும் பெறுவரென் றங்க
ணிசைத்தன ளிருந்தமிழ்ப் பெரியோன். 26

நமர்குலத் திவனென் றசலவுச் சியின்மேல்
நண்ணிநோக் கியதெனக் குணப்பால்
நிமலமார் சவிதா வெழுந்தன னன்னுன்
னெறிவழா விருதயம் போலக்
கமலமிக் கலர்ந்த காலையிற் பனசைக்
கடிநக ரடைந்துநான் முகத்தோன்
அமலபுட் கரணி யாடிநீ றக்க
மணிந்தெழுத் தைந்தையு மறைந்தான். 27

அந்தவே லையினிற் சுமதிமுன் போல
வாண்டுமூன் றுயவந் தத்தில்
வந்தனை புரியுஞ் செவ்வியிற் பதாதி
மருவுறப் புறத்திலுள் ளணுகிச்
சுந்தரப் பொருளைச் செஞ்சடைத் தேவ
தேவனைத் தோன்றிடக் கண்டு
நந்துபே ரன்பு மயமதா யுலகை
நழுவினேன் செயலெனத் துதித்தான். 28

அடைந்துநற் றுதிசெய் தவனைச்சே டியர்கள்
அருகுற வரவநாட் டரசி
மிடைந்தபே ரழகைக் கண்டுபூங் கருப்பு
வில்மதன் பொருவதைப் பிறர்கள்
இடந்திக ழாமல் நின்றுமுன் வினவ
விதயமீ துன்னிநீ ரியாவர்
படர்ந்தவா றென்கொல் இருப்புமுங் குலமும்
பகர்திரென் றிடவவன் பகர்வான். 29

திகழரித் துவச னென்பெய ரிந்தத்
தேசமார் மன்னவன் மேலா
புகல்மநுக் குலத்தி லுதித்தநான் தீர்த்த
யாத்திரை செயக்குறு முனிவன்
பகர்ந்தவித் தலத்தின் மான்மியங் கேட்டுப்
பரிவுளத் தடைந்துனைக் கண்டு
மிகமயக் குற்றேன் உன்பெய ரிருப்பும்
விளம்பெனக் காரிகை யுரைப்பாள். 30

நாக்கடைப் புரட்டித் திப்பட விழிக்கு
நாகலோ கத்தினுக் கரசன்
தேக்குமா யிரம்பைத் தலையினு மணிகள்
செறிந்தவா சுகியரி தீன்ற
மாக்குல மடந்தை யென்பெயர் சுமதி
வனப்பறி வுயர்ந்த நற்குலத்தி
லாக்கொரு மகிழ்ந னென்றுமூ வருட
மற்சனை புரிந்திவ ணிருந்தேன். 31

என்றவா சகங்கேட் டகங்களிப் பெய்து
மிறைவனை நோக்கிநின் றுரைப்பாள்
இன்றெம துலகத் துடனியைந் தணைந்தா
லெந்தையென் றுய்மிக மகிழ்ந்து
மன்றலுக் காகப் புரியயா னுரைப்பேன்
மன்னவ வுண்மையா மென்ன
சென்றவ ளோடு நாகலோ கத்திற்
செறலரும் பிலநெறி சென்றான். 32

பானிறம் பழுத்த கூனெயிற் றரவம்
பரந்தநாட் டினைத்தனிப் புரந்தோ
னைவா சுகியும் அவன்றனிக் கிழத்தி
யாகிய வரிவையுங் கண்டார்
ஊனமி லரிய நோன்பிழைத் திவளை
யுறமிகப் பெற்றன மிவளிக்
கோனையும் பெற்றா னென்றக மகிழ்ந்து
குதூகுல வதுவைசெய் வதற்கு. 33

## வேறு

மருவு மக்கணந் தூதரை வம்மினென்
றுரைசெய் மாமண முற்றதன் தன்மையை
தெரிய யாவர்க்குஞ் செப்பிடு வீரென்று
விரியு மொப்பனை யாவும் விதித்தனன். 34

சுமதி தன்னையு மன்னையுந் தூயறல்
அமைய மூழ்குவித் தாடைவி பூதிகூர்
திமிர மாற்றுந் திகழ்மணிப் பூணெழிற்
றமனி யப்பணி யாவுந் தரித்தனர். 35

வதுவை செய்யுஞ் சடங்கு குரவனல்
விதிவ ழாமல் விளங்க விழைத்தனர்
சிதைவின் மூவுல கத்தினுட் செப்புதற்
கதிக மத்தியின் லோக வரசனும். 36

ஆற்றி வாசுகி யந்தண் புனலினைச்
சாற்ற ருந்திண் ணரித்துவ சன்கரத்
தேற்றி யென்கன் னியைக்கொடுத் தேனென
மாற்றி டாதுரைத் தன்புற வார்த்தனன். 37

பதும ராக முதலிய பன்மணி
விதமு மேற்ற விலைவரம் பின்றிநற்
கதிரு லாவு கிரீடமுங் காமரிற்
குதிகொள் செல்வந் தருமொண் குளிகையும். 38

மருக னுக்கிவை யென்று வகுத்தபின்
றெரிய நன்மகட் கேற்றபொற் சீதனம்
அருக லின்றி யளித்துய ராசிகள்
பெருகக் கூறி யனுப்பினன் பெற்றியால். 39

## வேறு

மணிச்சி லம்பிவர்ந் தரும்பில வழியினைக் கடந்து
தணிக்க ரும்பெரும் மகிழ்ச்சியிற் பனசையிற் சார்ந்து
கணித்த வானுயர் சினகரத் தடுத்ததெக் கணத்தில்
அணித்து மாமதில் மாடமு மமைத்ததி லிருந்தார். 40

அந்த நாளேயி லமைச்சர்க ளறிந்துயர் பனசை
வந்தி ருத்தனர் வணங்கினர் மகிழ்பெரும் பூசை
சந்த மன்னவன் நாககன் னிகையொடுஞ் சயம்பு
நந்தி நாதனை யருச்சனை புரிந்திடு நாளில். 41

உரைத்த செஞ்சடை வேதிய ருற்றகோ யிலுக்கு
வரைத்த தெற்கிரு வாணமே வியவிடம் வயங்கத்
தருக்கி யோர்தடங் கண்டதிற் ருன்படிந் திலிங்கம்
அரித்து வேசுர னென்றவ ணுட்டியர்ச் சித்தான். 42

நாக கன்னிகை நாடரும் பெரியநா யகியா
ரோகை வைத்துறு மிடத்தினுக் குயர்குடக் கதனிற்
பாக மிக்கொரு தடங்கண்டு படிந்துசொல் லுமையை
ஏக சித்தமோ டருச்சனை புரிந்தவ ணிருந்தாள். 43

முருகு லாவுநற் சோலைகள் பற்பல முதிர
மருவி யேவிளை பண்ணைகள் பற்பல மல்கப்
பொருவின் மேவிய பதிகளும் பூசனைக் கமைத்தே
உரிமை பெற்றிடச் சூலபா டாணநாட் டினனுல். 44

தொன்மை பெற்றபொற் றூபிக ளாதியைத் தொடர்ந்து
பன்மை பெற்றமண் டபமதிற் கோபுரம் பலவும்
வன்மை பெற்றிடப் புதுக்கினன் கட்டினன் வயங்கப்
பொன்ம யத்துற மேய்ந்தனன் புரவலன் புகழ்ந்து. 45

திண்ணி தாகிய சித்திரை மதிமுதற் பக்கத்
தெண்ணு பஞ்சமி யிற்கொடி யேற்றிநா டோறும்
மண்ணு மிந்திர விமானமும் கயிலையும் விடையும்
நண்ணு தேர்களு மியங்கிடத் திருவிழா நடாத்தி. 46

வேதி யர்க்ககம் வெறுத்திட வெறுக்கைக ளளித்தே
பூதி சாதனப் புண்ணிய மகேசுரர் முதலாம்
போத முற்றவர்க் கன்னமும் பொருள்களு மளித்து
தீதில் சத்திர நந்தன வனமுதற் செறித்தான். 47

செறுநர் மாமணி முடிபடச் சிவந்ததாள் படைத்த
மறுவி லாவரித் துவசனுஞ் சுமதியு மதனும்
இறுதி யொன்றிலா விரதியு மென்னவாழ்ந் திருந்து
பெறவ ருங்கயி லாயமுற் றடைந்தனர் பின்னர். 48

சனற்கு மாரவென் றருளிய நந்திதன் முனின்
மனப்ப டிற்றினை வென்றமா முனிவரன் வணங்கி
யினித்தி கழ்ந்துறுங் காதையெற் கருளென விசைத்தான்
றனக்கு நேரிலா முனிவரர்க் கருளினுன் றக்கோன். 49

நாககன்னி பூசித்த சருக்கம் முற்றிற்று.

## பன்னிரண்டாவது நாகு கன்னன் சருக்கம்

### வேறு

வெம்முடப் புழையெ யிற்றின் விடங்கல்வா சுகிதான் பெற்ற
செம்மைசேர் நாக கன்னி செயல்விரித் துரைத்தா மிப்பால்
அம்மவோர் மறையோ னேடு மரும்பொருள் கவர்ந்த யின்றும்
இம்மையிற் பனந்தாள் மேவி யெய்திய மேன்மை சொல்வாம். 1

தேசுறு கடவுள் தேசஞ் சிறந்தநல் லகரந் தன்னில்
மாசற வுரைப்போர் கேட்போர் வழங்குவோர் தான மேற்போர்
ஏசலில் வேள்வி செய்தலி யற்றுவித் திடுத லென்னும்
ஆசறு தொழிலோர் மேவு மக்கிர சாலை யாமால். 2

இந்தநல் லகரந் தன்னில் இருக்குமோ ரந்த ணன்
சிந்தனை புரிந்து மற்றோன் திவசத்துக் கென்று சேர்த்த
மைந்துறு பழமுந் தேனும் வவ்விமிக் கருந்தி வாழ்ந்து
நைந்துடல் விடும்போ தந்த நமன்றமர் பிடித்தா ரன்றே. 3

வயமிகக் கொடுபோய் வெய்ய மாநர கங்க டோறு
மயுதமூன் றழுந்தச் செய்தா ரதற்பின்வே டுவர்கு லத்திற்
புயனிறத் துருவி லேய்ந்து புன்மைசேர் கலியிற் பாவம்
மயலுற வளரு மாபோல் பிறந்துடன் வளர்ந்த பின்னர். 4

மதிக்கருந் தீவ கப்புள் வார்வலை பிசின்கோல் கண்ணி
கொதித்திடப் புட்சி மிழ்க்கும் பயில்மொழி கொண்டு காட்டி
இதத்திலுற் றொருவ னேனு மெண்ணிலா தவர்போற் சென்று
வதைத்தபுள் விலங்கு மற்று மட்டுரைக் கரிய வாமால். 5

தவசிபோல் விரதி போலத் தகுமறை யோர்கள் போல
அவரவர் விரும்ப வேசென் றரியதாம் பூலம் வெல்லம்
முவியலில் நஞ்ச மிட்டு முணர்வற மயக்கஞ் செய்யு
நவமுறும்பொடிமேற்போட்டுநற்பொருள்கவர்ந்தொளிப்பான். 6

## வேறு

இவ்வ ணங்கொடும் பாவ மியங்கல்போல்
தவ்வ லுற்றுழல் வோன்றிசை தப்பின
பௌவ வங்க நகருற்ற பான்மைபோல்
செவ்வி முற்புரி காலஞ் செறிந்ததால். 7

ஆகை யாலவ் வனத்தி லதரிடை
வேக மாய்ச்செலு மிக்க முனிவரோ
டேக நாத னியைந்த தலங்களைத்
தாக மாய்த்தொழத் தாஞ்செல்லு காலையில். 8

அன்ன ரோடு சிவாலயங் கள்பல
துன்னு மாற்றிற் றொடர்ந்து சிவபிரான்
தன்னு மைக்கருள் ஞான தலமெனு
மன்னுந் தால வனம்புக் கடைந்தனன். 9

அத்த லத்தின்முன் னுளயன் கண்டதோர்
சுத்த நற்றடந் தோய்ந்துவெண் ணீறணிந்
தொத்த கண்டிகை பூண்டொப் பிலாததோர்
அத்தன் முன்பணிந் தஞ்சலி யத்தனாய். 10

போந்தெ மம்மை புனைமலர்த் தாட்டுணை
சார்ந்து நாகிறை தன்பிலங் கண்ணுறீஇ
ஆர்ந்த தென்புல மேவி யமர்ந்தனன்
ஏர்ந்த யோக மவுனிக ளென்னவே. 11

இந்த வண்ண மியைந்தனன் மூன்றுநா
ளந்த நாள்தரு வாதிரை யாதலால்
இந்து மவுலி யிணையடி யேத்தினன்
முந்து வெவ்வினை முற்றுந் துரந்தனன். 12

வேறு

மாபிலத்தைக் கண் ணுறலால் மன்றுடையோன் றெரிசனத்தால்
தாபமிகும் பாவவுடல் தருக்கறப்பொன் றிடுமேல்வை
தாபதர்போற் றும்பரமன் றுரகத்தைச் சாற்றிடலால்
தீபமென விண்ணவர்கள் செய்விமா னங்கொணர்ந்தார். 13

மிகநிறைந்த பெருங்கயிலை மேவியர னருகுய்த்தார்
மகபதிமுன் னனவர்க்கு மாதேவ னுரைத்தருள்வான்
தகுதீர்த்த யாத்திரையிற் சார்முனிவ ருடனணுகி
யகல்வேலை கண்டுதிர வியங்கவர்வா னருகணைந்தான். 14

ஓதுமுனி வரனுருவோ டுடன்சென்று திருப்பனந்தாள்
மாதலத்தி லவருடனே வந்திரவு மூன்றிருந்து
சாதல்புரி தன்மையினற் றுரகம்பெற் றிங்கடைந்தான்
ஆதலினப் பதியடைவா ரருந்தவஞ்செய் வோரென்றான். 15

கட்செவியா பிரம்பணத்திற் பரிக்கவுயர் காசினியிற்
றிட்பமிகும் பனந்தாளிற் செய்யமன வாக்குடலாற்
றிட்பமுள தீர்த்தத்திற் றுன்படிந்தோர் வாசமுற்றோர்
உட்கனிவானமைக்கண்டோர்பெறும்பேற்றையுரைக்கரிதால். 16

இரணியமோ தனம்பூமி யிவையாதி பனசையினி
ன்னொருமையி லீந்தோர்கள்பலன் ஒன்றிலக்க மாகுமிவன்
றெரியவொரு கற்பமகா போகத்திற் றிளைத்துமுத்தி
மருவவடைந்திருப்பனென்றான்மதனையெரி தெறக்கொன்றான். 17

என்றுரைத்த நந்தியினை யிறைஞ்சியப்பா லிசைத்தருளென்
றன்றிவரும் புலக்குறும்பை யட்டசனற் குமாரனன்பி
னின்றிறைஞ்சிக் கேட்கவன்று நேயமொடு பார்த்திசைப்பா
னென்றுமுளத் தவரறிமி னெனச்சூத னுரைசெய்தான். 18

நாக கன்னன் சருக்கம் முற்றிற்று.

## பதிமூன்றுவது தருமசேனன் பூசித்த சருக்கம்

வெருவருங் கொடும்பாவ மொருவடிவாய்த்
திரண்டுதித்த வேட னன்று
மருவயல்சூழ் திலகுபனந் தாளின்முத்தி
மருவியுற்ற வகைபு கன்றோந்
திருகுமுளத் தரசர்செருக் ககன்றுதொழப்
பொதுநீக்கிச் சிறப்பி னுளுந்
தருமசே னன்றனையர் மூன்றடைந்த
சரிதையினைச் சாற்றுவாமே. 1

திருந்துபருப் பதத்தெழிலி நீர்பொழியச்
சந்தகிலின் றேய்வு கொண்டு
தரங்கமுடன் வருங்கோதா விரிவடக்கு
மாளுவதே சத்தில் வாழ்வோன்
பெருங்கீர்த்தி யுடையமநு குலதரும
சேனனெனும் பெயரும் பூண்டு
வருங்குறையொன் றில்லாது பூரணமாஞ்
சிவனருளே வாய்ப்ப நிற்போன். 2

இருமூன்றி லொருகூறு கடமைகொண்டு
காத்திரமே யுலக மாந்தர்
மருவுமுயிர் தானுமாய் நடத்துவோ
னுகமங்கள் மநுநூ லோர்பத்
தரியசிவ புராணங்கள் மற்றுளதும்
பெரியோர்க ளறையக் கேட்போன்
தெருளறிவி னெஞ்சகத்தைச் செலுத்துவோ
னென்னலர்க்குச் சீயம் போல்வான். 3

அப்பொழுது மகதியாழ் முனிவனணு
கினனுக அடிவ ணங்கி
மைப்பொதியுங் களத்திறைவன் றிருச்செவிக்கின்
னமுதளிக்கு மாத வத்தோய்
கைப்படுநெல் லியின்கனிபோல் மநுமுறையெற்
கருடியெனக் கான வேந்தன்
ஒப்பருமா மநுவேந்தே நீயறியா
யெனினுமியா முரைப்பாங் கேட்டீ. 4

காமியநிட் காமியமா மதிற்பிந்தும்
வேள்வியினேர் கரிசொன் றில்லா
மாமுதல்வ னடிசேர்ந்தா னந்தவா
ரிதிதிளைத்து மகிழ்ந்து வாழ்வார்
நேமமொடு காமியத்தை நெறிபிறழா
தியற்றியவர் நினைந்தாங் கெய்திப்
பூமகளு நாமகளு நனிமருவப்
பூபதியாய்ப் பொலிந்து ளாரால். 5

மனுநெறியான் விதிவழுவா தரசியற்று
முடிவேந்தின் மரபிற் றேன்றி
தனைநிகர்மந் திரத்தலைவர் வளநாடு
வலியவாண் டகைசால் பைங்கூழ்
முனைதெறுமா தங்கமுதற் படையவர்பால்
நட்புறவே முதல வாறு
மினிமையுறப் பெறுமவனே யரசர்சிகா
மணியாக இருப்ப னன்றே. 6

அலகில்மா நகர்மாக்க ளாந்துணைவ
ரெண்மரையு மகலா ளுகி
யுலகியலோ டறநிலையும் மறநிலையும்
பொருளின்ப முணர்ந்து மேலாம்
பலகலையின் பொருளோர்ந்து சுற்றத்தா
ரைவர்களும் பரிய நாளும்
இலகியகாட் சிக்கெளிதாய்க் கடுஞ்சொலிகழ்ந்
தியல்பவனே யிறைவனுவான். 7

புடைநெருங்கச் சூழ்பவர்கள் கண்ணுகத்
தானடத்தப் புகுவ தோர்ந்து
மடியகல விழிநீர்க ளுகவிடித்துச்
சொல்பவர்தன் வாசற் காக்கத்
திடமனமுந் தாய்மைகளு நல்லினத்தாற்
சேருமெனுஞ் செயல்கைக் கொள்க
கொடியவுலோ பந்தவிர்க தருமநெறி
நிதியீட்டக் குறித்தோன் வேந்தன். 8

### வேறு

துணைவலி யெதிரி வலிவினை வலியைத்
தூக்கிவெவ் விகல்வெலுங் கால
மணைவுரு தென்னிற் குரண்டமுந் தகரு
மாயவை சொன்மிகத் தாழ்ந்து
தணிவற முடிக்க வற்பமற் றவனுந்
தகுபெல மென்றுற விடங்கள்
நணுகியோர்ந் தறிந்து மறப்பிலா தொழுகி
நாடியே செய்பவன் வேந்தன். 9

வெருவர நாட்டைச் செய்பவன் விரைவில்
வீவது நிச்சயந் துயரால்
அரிதுநொந் தழுதார் கண்ணினீர் மன்ன
னுக்குமா மலையினைத் தேய்க்கும்
உரியவே னுலகின் மநுமுறை செங்கோ
லோச்சிடு நெறியது பிறழ்ந்தால்
வருடமே பொய்க்கு மென்றினி துணர
வல்லவன் மநுகுல வேந்தன். 10

### வேறு

வெலற்கரிய கழங்காடல் பகற்றுயிறல்
புறங்கூறல் வேட்ட மாற்ற
லிலகிழையார் தமைவியத்தல் மதர்த்தல்பல
வியந்துவைத்த லிசைகள் பாட
லுலகினிகழ் நடம்புரிதல் பயனிலவாய்த்
திரிதலிவை யொருபா னென்று
மலகுளகா மக்குணங்க ளிலனுகி
யியல்பவனே யரச னுவான். 11

நன்குணரா நவையுரைத்தல் நல்லவரைச்
சிறைசெய்தல் நன்மை கோறல்
இன்குணத்தோர் தமைக்கறுவல் பிறர்குணத்தை
யேதமென வெளிது பேசல்
புன்கணுறப் பொருள்வெளவல் மிகவெகுளல்
கோறலெனப் புகலோ ரெட்டு
வன்கண்மை யிலனுகி யிருப்பவர்க
ளரசரென வழங்கு வாரால். 12

தொன்றுதொட்டு வரன்முறையில் வந்தவராய்க்
கலைபலவுந் தொகுத்து ணர்ந்து
குன்றுரமும் புயவளமை யுடையவராய்க்
குறியுணர்ந்து கொளவல் லோராய்
ஒன்றுமரபினர் வழியில் வந்தவராய்
வாயில்தனி லுழைய ரெண்மர்
என்றுமுடை யவனவனே யரசர்களிற்
றலைவனென விசைப்ப ரன்றே. 13

அகத்தூய்மை யுளர்வலிய ரெழிலார்ந்த
வாக்கையின ரறிவின் மிக்கோர்
முகக்குறியு முளக்குறியு முணரவல
ரிடங்கால முறையி னோர்வார்
மிசப்பயிலு நீர்மையின ராய்ஒற்றர்
பலருடைய வேந்தன் சீர்த்தி
யகலுதகந் தனிலெண்ணெய் எனப்பரவி
யமைவரென வறைவர் மேலோர். 14

## வேறு

அறத்தினே டியநற் பொருளினைக் கூட்டல்
ஆருயிர் தங்களுக் கிரங்கல்
சிறப்பிலா தவரை விழைவுரு திருத்தல்
சிவனடி சிந்தையில் வைத்தல்
உறுப்பமைந் துள்ள படைக்கலம் பயிறல்
லுற்றவர் தங்களைக் காத்தல்
பொறுப்பினை யுடைமை யென்றிவை யுடையான்
பூபதி யாகுவன் வேந்தே. 15

## வேறு

ஓரெழுத்தோ தியமுனிவ வுரைத்தவெலா நன்குணர்ந்தேன்
நாரமுடன் பரிமேத யாகத்தை நானியற்றத்
தீரமுடன் நினைத்தனன்யான் செய்யவுட னிருந்தருளென்
றீரமுடன் அரசுரைக்க இருந்தவத்தோ னருள்செய்வான். 16

மிகவிரங்கி முனிவரன்முன் விளம்புவான் மநுவேந்தே
மகவிலேயே லிகபரமும் வயங்காதென் றிப்பாரந்
தகுபுயத்திற் பரிப்பானைத் தருவதற்கோர் வகைசொல்வாம்
அகமுறவே கேளென்ருன் ஐம்புலனு மறவென்ருன். 17

தெக்கணதிக் கினிற்பொன்னித் திருநதியென் ருென்றுளது
அக்கரைவாழ் கேத்திரத்தி லருண்மூர்த்தி பலவுறினும்
பக்கமுறு மம்பிகைக்குப் பகர்ஞான மளித்தருளும்
முக்கணவன் பச்சிமமாய் முதன்மைபெறுந் தலமுரைப்பாம். 18

பொலிந்துயர்ந்த திருப்பனந்தாள் பொற்பிலுமை யாள்புரம்பே
ரிலங்கவரும் பிரமபுரி யெழிற்ருட கேச்சுரஞ்சீர்
மிலேந்துறுமிந் திரபுரிமால் விண்டுபுரி நாகீசம்
மலிந்துளபே ரின்னமுமுண் டிதன்பெருமை மதிப்பாரார். 19

பாகுதேன் பான்மொழியைப் பகர்ந்தருள்பார்ப் பதிப்பிரிய
ராகையா லவள்தீர்த்த மவள்வடிவே யாமதனு
லோகையிலன் ருள்நதிபார்த் துயர்மேற்கா னனமாக
நாகலிங்கே சுரர்வெள்ளி நகத்தின்மிக மகிழ்ந்திருப்பார். 20

அத்தலத்திற் செயுமறங்கள் ஒன்றுநூ ருயிரமா
மொத்தமலே யாட்குவலப் பாகத்தி லுயர்பிலத்தை
சித்தமுறப் பார்த்திருப்ப ளப்பிலத்தின் றிறநோக்கி
நித்தனைப்போய்த்தெரிசித்தோர்நினைத்தவையெல்லாம்பெறுவர்.

சத்தியஞ்சத் தியமீது தருமசே னுநகரில்
ஒத்துறைந்தோர் சேவைகண்டோ ருற்றிறந்தோ ரெல்லாரு
நத்தனயன் பொன்னுட்டின் நாயகன்றே வாதியர்கள்
மொய்த்துதுதி செயக்கயிலே முதல்வனரு கினிலிருப்பார். 22

ஆதலினு லங்கடைந்து செஞ்சடைவே தியர்க்கடுத்த
மூதுரைசேர் பூருவத்தில் மூன்றுவா ணக்கிடையில்
ஓதியபா நுவின்தீர்த்த முளததனின் றேவியுடன்
தீதகலப் படிந்துநீ றக்கமா திகள்தரித்து. 23

தைப்பூசந் தனின்மவுனத் துடன்கோயிற் றனிலேகி
யொப்புயர்வின் ஞககன்னி தீர்த்தத்தி லுடன்மூழ்கி
மைப்பொதியுங் களத்தரையு மலைமகளை யும்பணிந்து
செப்புபிர தக்கணமாய்ப் பிலத்தினையுந் தெரிசித்து. 24

நந்தியின்பின் னெம்பரனை நாடியன்பா றெரிசித்து
தந்திமுகன் றிருவடியிற் ருழ்ந்துயர்ந்த வஞ்செழுத்தைச்
சிந்தைமகிழ்ந் திடவுரைத்து செய்துபரி மேதகத்தை
சுந்தரமா மூன்றுபிள்ளை யளித்தியெனத் தொழுதிறைஞ்சி. 25

சென்றுவரங் கொள்கவெனத் திகழ்மகதி யாழ்முனிவன்
சென்றதிற்பின் னடிவணங்கித் திகழ்ந்தபரி வாரமொடு
சென்றுபல தேசங்கள் கடந்துவளர் தென்பனசை
நன்றுறச்சென் ருன்றரும சேனனெனு நராதிபனே. 26

வேறு

பொருவி லித்தல வெல்லையைக் கண்டனன் போற்றி
யிரணி யந்தரு சிவிகைவிட் டிறங்கிநின் றிலகும்
பெரிய கோபுரச் சேவையைப் பிரியமிக் கிறைஞ்சி
கருதி யின்புடன் வருகையிற் றூபியைக் கண்டான். 27

கண்டெ ழுந்தபே ருவகையிற் கைதொழு திறைஞ்சி
பண்டு வெங்கதிர்த் தீர்த்தத்திற் சங்கற்பம் பண்ணி
யெண்ட யங்குதன் மனையுட னியைந்ததில் மூழ்கி
வெண்டுகிற் புனைந் தக்கமும் விதியுட னணிந்து. 28

உரைத்த வத்தடத் தீர்த்தத்தி லொருபன்ன சாலை
பொருத்து வித்ததில் வரைந்ததன் பூவையுந் தானு
மெரிக்க ணுகுதி யியற்றுவித் தந்தணர்க் கீந்து
தெரித்த தீர்த்தத்தில் மூழ்கிப்பின் னவ்வணஞ் செய்து. 29

மகதி யாழ்முனி வள்ளலன் றுரைத்தவண் மையினிற்
றிகழுஞ் செஞ்சடைத் தேவனைத் தேவியைப் பணிந்து
புகர றத்திரு மதலைமூன் றளித்தருள் புனித
சகம ளித்தருள் தலைவவென் றடிக்கடி தாழ்ந்து. 30

விழைந்த காலமுன் றினுஞ்சிவா லயத்தின்மெய் விதிர்த்துண்
ணுழைந்து மேவிவாழ் சுயம்புவைத் தேவியை நோக்கி
குழைந்த வுள்ளத்திற் பணிந்துநேர் கூறரும் பிலத்தை
தழைந்த வன்பினுற் றெழுதுதன் னிருப்பிடஞ் சார்ந்தான். 31

நிற்ற மிவ்வணம் புரிபவன் நீள்சின கரத்தி
லுற்றெரு ளிப்பொலன் சிற்பரா லொண்டக டழுத்தி
கற்றை யஞ்சடைப் பரமர்க்குங் கவுரிமா துமைக்கும்
விற்ற ருங்கலன் னுடைகள் நிபந்தமு மமைத்தான். 32

நிலவு செஞ்சடை வேதியர் பூசைக்கு நிலங்கள்
தொலைவி லாதன விட்டுநாற் றிசையினுஞ் சூலச்
சிலைக ணன்குற நிறுவியுஞ் செழுமலர்ப் பொழிலு
மலிய நந்தன வனங்களு மமைத்தனன் மருவ. 33

**வேறு**

மறைவிதியின் படிபயின்று வந்தவிரு பிறப்பாளர்
நிறையவரு வித்திவுளி நிகழ்மேதி யாகத்தை
முறைமையினிற் புரிவித்து முகமலர்ந்து தேவியுடன்
நறைமலரோன் றீர்த்தத்தி னனிதுதைந்தா டியபின்னர். 34

செய்கடன்கள் முற்றிசிவ வேதியர்க்குச் சிலவழங்கி
மையணிகண் டர்க்கினிய மகேசுரர்க்கு நவநிதியம்
நையுமுளத் துடனளித்து நாண்மலர்த்தா ளருச்சித்துத்
துய்யமுது மருத்துவித்தான் றூயமநு குலத்தரசன். 35

இம்முறையி னிகழ்கால மில்லவள்சூன் முதிர்ந்துயர்ந்த
பொய்மையற வொருமூன்று புதல்வர்களைப் பெற்றெடுத்தாள்
செம்மையுறும் புதல்வர்க்குச் சேடியர்மஞ் சனமாட்டி
மும்மகற்கை யமுதருத்தி முதனிலக்காப் பணிந்துய்த்தார். 36

தெரிவரிய மகிழ்ச்சியினுற் றெரிந்தயன்றீர்த் தம்படிந்தான்
குரிசிலிருங் கோதானம் கோதகல்பூ சுரர்க்களித்தான்
அருண்முறையக் கினியோம மாத்தமுன் றினில்வருணம்
வருவிக்க நிகழ்நாமஞ் சாத்தினன் மநுவேந்தன். 37

திகழ்மகரத் திங்கடனிற் றிருவிழா நடப்பித்தான்
அகமகிழ்ந்தங் கதினீங்கா விரதமா யமர்ந்திருந்தான்
முகமுறுமத் தூபிக்கு மூன்றுவா ணக்கிடையில்
தகுதிபெறுந் தெக்கணத்தி லொருதீர்த்தந் தான்கண்டான். 38

பஞ்சசூத் திரப்படியே பரமலிங்க நாயகனை
எஞ்சலற வேதிகழ்வித் திசைத்தவத்தீர்த் தக்கரையிற்
பஞ்சமுக நாயகனைப் பதிட்டித்துப் பூசைசெய்து
விஞ்சுபரி வாரமுடன் றன்னகரில் மேவினான். 39

என்றபோ துமையபர மேசுரவென் றினிதிறைஞ்சி
வென்றிகொளும் புலக்குறும்பை வேரறவே கெடுத்தருளி
மின்றிகழுஞ் சனற்குமர விமலவென வடிவணங்கி
நன்றியுறு நிகழ்காதை நவிலெனக்கூ றினனிப்பால். 40

தருமசேனச் சருக்கம் முற்றிற்று.

## பதினான்காவது சங்குகன்னன் சருக்கம்

தெரிவ ரும்புகழி னிலக நீடிவளர்
செய்ய தென்பனசை மீதினிற்
தரும சேனன்மிகு தார ணிக்கதிபன்
சரித்தி ரங்களை யறைந்தனம்
திரிவில் வேடர்குல மன்னன் சங்குகன்னன்
சிருரி லாதகுறை மிகுதியால்
அரிதில் செய்யசடை யண்ண லின்கருணை
யால டைந்தகதை யோதுவாம். 1

அறைந்த மாளுவநற் றேச மார்சுனையி
லாடு வாரிமிழ்கு றிஞ்சியும்
நிறைந்த வெண்டயிர்க டைந்து ளார்களொலி
நிலவ மேவிவளர் முல்லையு
மறிந்து தாவுகயல் மிக்க செய்யினடு
மாதர் தங்களொலி மருதமுஞ்
செறிந்து நீடியவ னப்பு மிக்கிலகு
திலக மென்னுநகர் மேவுமால். 2

அந்த மாநகரில் வனச ரர்க்கதிப
ஞன மன்னனற முற்றுளான்
மந்தி ரத்தலைவர் முதலி ஞேர்புடையின்
மன்ன வெற்றியெழில் மல்கிடச்
சுந்த ரத்திலகு மூன்று தேவியர்கள்
தொந்த முற்றுவி ளங்கிடத்
தந்தி ரத்தின்மிகு செல்வ மோடிலகு
சங்கு கன்னனுறை காலையில். 3

இலகு முத்தரதி சைக்க ணுக்கதிப
னென்ன வாழுமதி லென்பயன்
குலந லத்தினை நடத்து தற்குரிய
குமர னில்லையெனி வென்றுதான்
பலவு மிப்படி நினைந்து ளத்தின்மிகு
பரிப வத்துழலு மவனெழிற்
றலம துற்றவர னருளி னிற்பெறுதல்
தக்க தென்றறிவில் வைத்தனன். 4

வேறு

செம்பொனவ மணித்தொகுதி வரவேடர்
குழாமிகவுந் திரண்டு சூழ
அம்புனல்மே னிறைந்துயர்கோ தாவிரியிற்
படிந்தளித்தா னலகில் தானம்
பம்பிமிக வளர்சோண பத்திரியிற்
படிந்தீந்து பருப்ப தத்திற்
சம்புவினைத் தெரிசித்துக் காளத்தி
தொழுதப்பாற் றணந்து போஞன். 5

கண்டுதெரி சித்தருணை யடைந்துமக
வான்கண்ட கயங்க ளாதி
மண்டியகா தலினுடலை நனைத்துமிகத்
தானங்கள் வழங்கி மேலாங்
கண்டருநெற் றிப்பரனைக் கைதொழுது
முத்தநதி கலந்து மூழ்கி
அண்டர்பிரான் றனைத்தொழுது பழமலையி
லெய்தினன் அறிவின் மிக்கான். 6

கயிலையினின் றுயர்மகதி யாழ்முனிவ
　　னங்கணுகக் கண்டி றைஞ்சி
வியனிலருக் கியமாதி யீந்துமுக
　　மன்கூறி வினவப் புக்கான்
பயனுணரா தந்தந்தத் தீர்த்தங்க
　　டொறுமாடிப் பால்வெண் ணீறும்
வயமுறுமக் கமுமணிந்தஞ் செழுத்துநவின்
　　றேனிவையின் வகையோர்ந் திலேன். 7

என்றுரைத்த வனசரனுக் கெழிற்பூதி
　　மான்மியத்தை யிசைக்க வெண்ணி
நன்றுரைப்பா னைந்தாவின் மயமைந்து
　　வில்வமரை யடையிற் சேர்த்து
கன்றுதேந் துவதுகற்பம் வில்வமலா
　　தேந்தலநு கற்ப மாகும்
பொன்றரிய நிலத்துவீழ்ந் திடுவதுவி
　　கற்பமெனப் புகல்வர் நல்லோர். 8

உத்தமமத் திமமதன்ம மானுலு
　　முத்தமமே யுரைத்த மூன்றுஞ்
சித்தபவித் திரமிரக்க முற்றிநாற்
　　பொருளடைவர் திகழச் சாத்திற்
சுத்தவெண்ணீ றணியாதெக் காரியமுஞ்
　　செயினீசர் தொடுதற் கொண்ணுச்
செத்தகளே பரமாவர் பரிசிக்கிற்
　　புனத்தீக்கை செய்து கொள்வர். 9

### வேறு

பலமுக மதினு மொன்றுமூன் றைந்து
　　பதினொன்றே ழிரண்டுள முகங்க
ணலமிகு பலனுங் களமெண்ணன் கிருகை
　　நாலாறுச் சியிலுற லொன்றே
யிலகுகா திரண்டுக் காறிரண் டாறெட்
　　டெழிற்றலைக் கலனூறெட் டென்றே
பொலன்மணிப் படிகம் பவளநூன் முடிச்சிற்
　　புணைவர்க ளக்கமா லிகையை. 10

சோடச விரட்டி யோரெழு நான்கு
 தொக்கமு மொன்பதை யியைந்து
தேடரு மக்க மணிவட முறையிற்
 செபித்தவர் கலவிபொன் சாந்தம்
நீடிய முத்தி யடைந்தினி திருப்பர்
 நேயமிக் கணிந்தவர் தமக்கு
நாடிய தெய்து மெனமறை நவிலு
 நாரத முனிதொகுத் துரைத்தான். 11

### வேறு

என்று நாரதன் யாவு மிசைத்திட
வன்று தான்சங்கு கன்ன னடிபணிந்
தொன்ற வேதுதித் தொண்மக வில்லையால்
இன்று வெங்குறை தீர வியம்பெனு. 12

அன்பு மிக்க வனசர வண்ணலே
முன்பி ராமண னாகி முயன்றபோ
தின்ப சுக்க ளிருந்ததி லொன்றுதான்
தன்ப தத்தொரு கன்றையுந் தந்ததால். 13

மருவு கன்றுக் கொளிக்கும் வகையறிந்
தருளி லாமற் பசுவை யடித்ததிற்
பெருகு பானசை யாற்பசுப் பெற்றவு
ணொருவ வுள்ள வெலாங்கறந் துண்டனை. 14

நொந்திடப் பசு நோக்கி யடித்ததா
லிந்த வேடர் குலத்துவந் தெய்தினை
முந்து கன்றை வருத்து முயற்சியால்
மைந்த னற்றனை யென்று வருத்தனன். 15

திகழ்கு ளப்படி நீர்முதற் றீர்த்தமா
யிகன்ம ணற்சிவ லிங்கமா யேய்ந்திடும்
தகவி னற்பனந் தாளை யடைந்தருட்
புகவன் பூசையின் பண்பினு லாமெனு. 16

மாத மொன்றுற வாசஞ்செய் மேவுமென்
ரோதி யிச்சையி லோவின ருயிடைப்
பூதி யாரப் பணிந்து பொருநரோ
டேத மில்பனந் தாள்வந் திறுத்தனன். 17

வேறு

கவுரிவே தியனுற் கோட்டுக் களிறுதா டகைமு ராரி
திவளொளிப் பரிதி சோமன் சேடனோ டரித்து வேசன்
தவலறு நாக கன்னி தருமசே னன்றீர்த் தத்தில்
பவமறப் படிந்து கூபம் பார்த்தறல் புரோட்சித் தன்பால். 18

எட்டிரட் டித்த தான மீந்துய ரால யத்தில்
மட்டிலன் பதனுற் சென்று வள்ளலைக் கவுரி தன்னை
யிட்டமுற் றரிச்சித் தாக்க ளெண்ணில வளித்துச் சூழ்ந்து
சிட்டநா யகனை வேண்டிச் சென்றனன் நகரில் வேடன். 19

ஒருதிங்க ளனந்த விர்ந்தூண் பலாதியா யுற்றி ருந்து
பொருவில்தன் பட்டி னத்திற் போய்மனைக் கிழத்தி மூவர்
மருவவங் கிருக்கு நாளில் வள்ளலா ரருளி னாலே
கருவுத ரத்திற் றோன்றுங் காலையி லதிச யித்தார். 20

சடங்குக ளியற்றிப் பெற்றார் தையலார் மூன்று பேரும்
மடங்கலே றனையான் மூன்று மைந்தரை வளர்த்தார் பின்பு
விடம்பொரு காளன் வேலன் விடதர னென்று பேரும்
படர்ந்தவன் பதனு லிட்டுப் பரிவுட னிருக்கு நாளில். 21

காளனுக் குரிமை நல்கி கதித்திடுந் தம்பி யோடும்
கேளிரு மன்னை மாரும் கேழுமந் நாடு மற்றுங்
கோளுறு நன்பொ னீயுங் குலவுசெங் கோன டாத்தி
ஆளென நிறுவி மேலா மருந்திருப் பனந்தாள் சேர்ந்தான். 22

முறைமையி லன்பு நீடத் தீர்த்தங்கள் முன்னி மூழ்கிப்
பிறையணி சடையான் றன்னைப் பெரியநா யகியைப் போற்றி
நெறியுறத் தொழுது போற்றி நிகரிலைந் தெழுத்து நூற்றெட்
டுறுதியிற் செபித்து மூவாண் டுறைந்தனன் தேவி யோடும். 23

வாசமுற் றிருந்து நல்ல வாழ்வினைத் துறந்தான் பின்பு
யீசர்நற் கருணை யாலே யெழிற்சிவ கணங்கள் பொன்னுங்
காசுமிட் டிழைத்த சோதிக் கதிர்மிகும் விமான மேற்றித்
தேசுடைக் கயிலா யத்திற் சென்றுகொண் டடைந்தார் மாதோ.

அணைந்தரும் போக மெல்லா மொருகற்ப மநுபவித்துத்
தணந்துகொல் லறிவி னோடுஞ் சுவேதனுந் தகும்பேர் பூண்டு
குணந்தரு மறையோ னாகிக் குவலய மதனிற் றோன்றிப்
பணிந்துறப் போற்றி யுய்வான் பனசையம் பதிவந் துற்றான். 25

பன்னெடு நாளி ருந்து பார்ப்பதி கருத வந்த
பொன்னவிர் மண்ணி யாதிப் புக்குறப் படிந்து நாதன்
தன்னிகர் சேவை கண்டு சச்சிதா னந்த முற்று
மன்னுசா யுச்சி யத்தை மருவினான் என்று சொன்னான். 26

என்றுசொல் நந்தி தேவ னிருபதம் வணங்கி நெஞ்சை
வென்றுமேல் வாகை வேய்ந்த வியன்றவச் சனற்கு மாரன்
துன்றுபே ரன்பாற் கேட்டுத் துலங்குற விதன்மே லின்ன
மன்றிறற் கதையோ தென்ன மகிழ்ந்திவை யுரைப்ப தானான்.27

சங்குகன்னன் சருக்கம் முற்றிற்று.

## பதினைந்தாவது காகச் சருக்கம்

குலவியவுத் தரத்திலகுங் குறுநிலமாட் சியிற்புரப்போன்
வலனுயர்த்த மறவேடர் மன்னன்வந் தனையுரைத்தோம்
அலையுமனச் சழக்ககன்ற வதிதிக்கோர் அவிழளித்து
நலமறியாக் கொடிவெள்ளி நகமடைந்த வியனுரைப்பாம். 1

திகழ்ந்தசத்தி மாநதியின் றீர்த்தத்திற் கும்பமுனி
யுகந்தில்லின் றுணையான வுலோபாமுத் திரையுடனே
மிகுந்தவருண் மயத்திலகு மிருகண்டர் முதலானோர்
மகிழ்ந்துறப்பன் னகசாலை மருவியருந் தவமிழைத்தான். 2

பொலிந்ததிரை மண்ணிநதிப் புனல்படிந்து நித்தலுஞ்செய்
திலங்குசடன் கழித்துயர்ந்த பூசனைசெய் தெரிவேட்டு
கலங்கலிலா வதிதியர்க்குக் கருணைமுத லனமளித்து
நலங்குலவுங் கலையோதி நண்ணிமகிழ்ந் திருந்தனனால். 3

இம்முறையிற் சின்னுளங் கிருக்குநா ளினிலொருநாள்
வெம்மைதரும் பரிதிமதி மேவுதினத் தம்முனிவன்
செம்மையிற்பிண் டப்பிரதா னங்கள்மிகச் செய்போதிற்
றம்மினத்தோடொருகாகஞ்சார்ந்துகொத்திக்கொண்டெழுந்து 4

தெக்கணமா னனமாகச் செலுநெறியி லோரதிதி
தக்கவான் றனைநோக்கிச் சாய்ந்துதுயில் காலையினில்
பக்கமிக வதைக்கடிவான் பார்த்தெதிர்த்தோர் கருங்குருவி
நெக்கியிடக் கொத்தியவிழ் நிலத்தில்விழப் படுத்தினவால். 5

அந்தவே லையிற்றப்பி யதிதிவா யினிலன்னம்
வந்துவீழ்ந் ததுகோயில் வாய்தல்முன்புக் கொடிவாலும்
வெந்திறலா ருண்டைவில்லான் மிகவொருவன் பார்த்தெய்ய
நொந்திடப்பட் டவனியினி னெய்தின்வீழ்ந் திறந்ததுவே. 6

அந்நேரஞ் சிவகணங்க ளரனருளால் விமானத்திற்
றன்னேரிற் றிவ்வியமாஞ் சரீரமுறப் புரிந்தேற்றிப்
பொன்னுருந் திருமேனிப் புனிதனுறை கயிலையினில்
நன்னுவி னுற்றுதித்து நண்ணிமகிழ்ந் தினிதடைந்தார். 7

அடைந்தமலன் அருகிலுய்த்தா ரப்போது கணங்களைப்பார்த்
திடந்திகழ்ந்த தீர்க்கதுண்ட னெனுநாமஞ் சிறந்திலக
அடைந்திடவுங் கணுதிபனு யருள்செய்தா னுகையினுல்
படந்திகழ்ந்த செஞ்சடையார் தம்பெருமை பகர்வாரார். 8

ஆகையினு லருங்காக்கைக் கவிழொன்றுக் கயுதமெனத்
தாகமுறுங் சிவலோகந் தந்தளித்தான் சம்புவெனில்
வாகையுற வறிந்தளிக்கும் வண்தானப் பலனெளிதோ
வோகையுறத் திருப்பனந்தாள் மான்மியங்கண் டுரைப்பாரார்.9

அத்தலத்தில் மனம்வாக்குக் காயமொவ்வா தாகினுமற்
றெருத்தெனினு மன்னமவி ழொன்றுபல வொருகவள
மெத்தவுயர் தவரேனும் விடையமன மகலாது
பொய்த்தவரென் றுலுமளிப் பார்பெருமை புகல்வாரார். 10

எனமகிழ்ந்தோ தியநந்தி யிறையவன்றாண் மலர்பணிந்து
தனைநிகர்மா தவத்துயர்ந்த சனற்குமர னதிசயித்து
முனமரிய தவமுயன்றோர் முன்னிவாழ் துயர்கின்ற
பனசையிலுற் றடைந்தவர்கள் பான்மையரு ளெனவிசைப்பான்.

காகச் சருக்கம் முற்றிற்று.

## பதினாறுவது எக்ஞகுப்தச் சருக்கம்

கறங்கன வாட்கை வயிறலைத் தெறியுங்
கருஞ்சிறைக் காகமா கயிலை
யுறைந்துய ரமலன் கணாதிப னென்றே
வுரைக்கவுற் றடைந்ததை யுரைத்தோம்
நிறைந்துயர் செல்வ நிலைமைபெற் றாலு
நிகழற மென்பதெஞ் ஞான்று
மறந்துமுட் கருதா வெக்ஞகுப் தன்றாள்
வான்கதி யடைந்ததை வகுப்பாம். 1

தரைகுழி குழிக்குந் தண்புனல் மண்ணித்
தண்கரை யுற்றதும் பனசைக்
கரையுரோ சனையில் வடகிழக் கதனில்
அமர்ந்தது கந்துக புரியாம்
பொருவிலத் தலத்தில் வாணிபம் புரிந்து
பொன்றிரள் மலையெனக் குவித்துத்
துரையினிற் றரும மென்பதே யறியான்
றன்பெய ரெக்ஞகுப் தனுமே. 2

வனப்புமிக் கடைந்த பனசைமா நகரில்
வயங்கிய விழாவணி யறிந்து
தனக்குரித் தான விலைப்பொருள் கொண்டு
சரோருக தீர்த்தத்தின் கீழ்பால்
கனத்துறு பொருள்கள் விற்பதற்காக காவண
நாட்டித் தான் சென்று
மனத்துயர் கோயில் நடஞ்செயு மாதை
மதித்தனன் வனிதையும் நேர்ந்தாள். 3

ஒத்தவள் தானும் பெரியநா யகியா
ருற்றவா லயத்தினி லேகி
தித்தியென் றரிதின் நடித்திடக் கண்டான்
சீர்த்திதா டகைசரித் திரத்தி
னத்தமோ ரிரண்டு சுலோகமுங் கேட்டா
னதன்பினவ் வங்கனை யுடனே
மெத்துகூ டார மிலகுதன் னிருப்பின்
மேவினு னவ்விடன் மாதோ. 4

அடிசிலன் னத்தை யன்னத்தை யனையா
ராசையா லவசரத் தயின்ருன்
மிடறது விக்கி விசனமிக் குழந்து
விடுத்தன ஞருயி ரதனை
படர்மெலி தூத ரணுகினர் கணங்கள்
பக்கலில் வந்தனர் மாதோ
மடவரல் லாசை யால்விளைந் திட்ட
வல்வினைப் பயனையா ருரைப்பார். 5

உரைத்தவள் நடனம் பார்த்தபோ தெதிரே
யுமைசிவ தரிசனஞ் செவியிற்
சரித்திர முறலால் சிவகண மணுகித்
தயங்கொளி விமானமீ தேற்றிப்
பொருக்கெனக் கயிலைக் கேகலு மியமன்
புகவிடு தூதுவ ரணுகி
வெருக்கொளு மிந்தச் சிதடனை யாங்கள்
விரைந்துகொண் டகல்வமென் றுரைத்தார். 6

என்றபோ தியம படர்களை நோக்கி
யிசைப்பர்க ணுந்தொழுற் குரியான்
ஒன்றவே தென்னிற் சுயம்புவிற் சிறந்த
வுபயநா யகன்றனைக் கண்டான்
குன்றளித் தவள்தான் சேவையுங் கண்டான்
குலவுசீர்ப் பனசைமான் மியத்தின்
துன்றிய கவிதை சிற்சில கேட்டான்
துன்னிய மரிப்புமங் கடைந்தான். 7

அப்பொழு தவர்கள் கணங்களோ டறைவா
　　ரறமதெட் டுணையுமே புரியான்
செப்பமொன் றுரையான் கவட்டுவா ணிபமே
　　செய்பவ னங்கனே தனக்காத்
துப்பமர் கோயிற் றரிசனஞ் செய்தான்
　　துயர்செயு மவமர ணத்தி
னிப்படி யடைந்தா னிவன்றனை நீர்கொண்
　　டேகுத நீதியன் றென்றார். 8

அங்கவ ரடைந்து தருமனுக் கறைந்தா
　　ரதிசயங் கேட்டுறத் துதித்தான்
பொங்கிமிக் குவந்து கணங்களுங் கயிலைப்
　　புராந்தக னருகினி லுய்த்தார்
திங்களங் கண்ணிச் செஞ்சடைப் பரமன்
　　றிசைமுகன் மாதவ னமரர்
தங்கிய தருநாட் டரசன்மா முனிவர்
　　தங்களைப் பார்த்தினி துரைப்பான். 9

## வேறு

தெக்கணபூ மியிலுயர்ந்த திருப்பனந்தா ளொன்றுளது
மைக்கணுமை யுடன்மிகவும் மகிழ்ந்துறைவோ மத்தலத்திற்
றக்கவிவன் மிகுத்தவிடன் தருமங்கள் செய்தறியான்
பொக்கமுடை யவனிங்கு புகுந்தபரி சதுகேண்மின். 10

முன்புரிந்த நல்வினையின் முதிர்ச்சியா லிங்கடைந்தான்
அன்புமிக நமைக்கண்டா னத்தலத்தி லேமரிப்பாய்ப்
பொன்றினனிங் கடைந்தனனேல் புத்திபூர் வகமாக
மின்றிகழத் திருப்பதியை மேவினவர் நினைத்தவர்கள். 11

அரிதினமைக் கண்டவர்க ளத்தலத்து மான்மியத்தைத்
திரமுடனஞ் செவிமடுத்துச் சித்தமுறப் பயின்றவர்கள்
பொருவிலுயிர் துறந்தவர்கள் சாரூபம் பொருந்திமகிழ்ந்
திருமையில்சா யுச்சியத்தை யடைந்திருப்ப ரெனவிசைத்தான். 12

மாதவரில் வசிட்டமுனி மாமகஞ்செய் மறைமுனிவர்
சாதமகற் சனற்குமர வென்றநந்தி சரைநோக்கி
காதல்மிகப் பணிந்தேத்திக் கருதருமப் பெருமையினை
யோதியரு ளின்னமென வுரைத்தனனென் றுன்சூதன். 13

எக்ஞகுப்தச் சருக்கம் முற்றிற்று.

## பதினேழாவது தீர்த்தச் சருக்கம்

### 1. மண்ணிநதி

அறிவ றங்களை யறிந்திடா வசியனங் கிறந்து
மறுவின் மாகயி லாயமீ தடைந்தமை வகுத்தோம்
திறமி குந்திருப் பனசையிற் றீர்த்தமீ ராறு
முறவி யற்றினோர் மான்மிய முகளமு முரைப்பாம். 1

அசல மன்றரு முமைதிருப் பனசைநா யகரை
நிசமொ டற்சனை புரிகுவா னினைத்துயர் தீர்த்த
மிசைய வாக்கெனக் குமரனுக் கிசைத்திட வியல்பாய்
நசையின் வல்விரைந் துற்றது சத்திமா நதியே. 2

அன்ன சத்தியாற் றறலிடை யாக்கையை நனைத்தோ
ரின்னல் சேர்பவக் கடலிடை யாக்கையை நனையா
ருன்னி மண்டல முதயத்தில் மூழ்கியோர் திவலை
பின்னை யுண்டவ ருண்டிடா ரன்னையர் முலைப்பால். 3

மண்ணி யென்றுசொல் சத்திமா நதியினில் வயங்க
அண்ணி லுட்கொளிற் கண்டிடிற் காற்றுற வணுகிற்
கண்ணு தற்பரன் வாழ்ந்திடுங் கயிலைசென் றடைவார்
திண்ண முண்மையென் றுலதன் பெருமையா ருரைப்பார். 4

### 2. பிரம தீர்த்தம்

ஏத்தி வேதியன் கண்டிடுந் தடமெனு மிரண்டாந்
தீர்த்த மாமதி லைப்பசித் திங்கள்மா சியினிற்
கூர்த்த வாதர விற்சிவ நாமமே கூறி
ஆர்த்து மூழ்கினோ ரரியசா ரூபமே யடைவார். 5

## 3. அயிராபத தீர்த்தம்

ஊற்ற மாரயி ராபத மூலவை யாற் குத்தி
யேற்ற வோடைகண் டிலிங்கமு நாட்டிய திதுதான்
ஞூற்ற லாகுமூன் ருந்தீர்த்த மதனிடைப் படிந்து
போற்றி நாதனைக் கண்டவர் கண்டிடார் புன்கண். 6

## 4. தாடகை தீர்த்தம்

பொருவில் தாடகை வாயுவின் திக்கிலே பொருந்த
வரிய தோர்தடங் கண்டநா லாந்தீர்த்த மதனின்
மருவ மூழ்கிநின் றடுத்தகீழ்க் கரையுறும் வடுகன்
றெரிச னைப்படு மவர்கள்மெய்ஞ் ஞானமே திளைப்பார். 7

அன்னமா தடந் தன்னிலே மூழ்கினோ ரகல்வான்
மன்ன னுகியிப் பூபதி யாகுவர் மருவச்
சொன்ன திற்படிந் தெள்ளிஞற் றெருகுபிதிர் தருமம்
பின்ன மற்றிழைத் தவர்சிவ லோகமே பெறுவர். 8

அந்த நீரினி லான்மயஞ் சென்னிமீ தாக்கி
வந்த ருஞ்சுரு மதியது பிறக்குநாள் மருவச்
சுந்த ரத்தினிற் படிந்தவர் தூயபா லகனை
யிந்து வைப்பொரப் பெற்றுவாழ்ந் திருப்பர்க ளினிதில். 9

உரைத்த வத்தடத் தன்பினு லுதயமுன் மூழ்கி
வரைத்து ரைத்திடுந் தானமெல் லாமிக வழங்கித்
திரத்தி லுற்றவர் கங்கையா திகள்நவ தீர்த்தஞ்
சரித்து மூழ்கிய பயனெலாந் தணந்திடா தடைவார். 10

## 5. விட்டுணு தீர்த்தம்

நிருதி திக்கின்பால் தடமஞ்சாய் நிகழுமால் தீர்த்தம்
பெருகு மன்னதிற் கன்னிமா தத்தினிற் பிறழக்
கருதி மூழ்கியங் கணனைவந் தித்தவர் கமலை
மருவு நாயகன் பதமடைந் திருப்பர்கள் மகிழ்ந்து. 11

## வேறு

### 6. சூரிய தீர்த்தம்

பருதிகண்ட தடமாருந் தீர்த்தத்தில் பரவுமன்பால்
மருவுமென்றூழ் வாரமுடன் கார்த்திகைமுப் பான்றினமும்
புரநனைத்தோ ரிரவிபதம் பொருந்தியின்ப மிகவடைந்து
தெருளறிவிற் பிறந்தரிய சிவானந்தம் பெற்றிருப்பர். 12

### 7. சந்திர தீர்த்தம்

சந்திரபுட் கரணியெனுந் தகுமேழாம் தீர்த்தத்தி
லிந்துவா ரங்கடொறு மூழ்கினோ ரிடர்நீங்கி
பந்தமெனுங் கடனீங்கிப் பிணிநீங்கும் பராபரன்சேர்
சந்தமுறுங் கயிலையடைந் தரனுருவிற் றருக்குவரால். 13

அத்தடத்தின் மாசிமதி யமரபக்சஞ் சதுர்த்தசியி
லொத்தவிந்து வாரமல்லா துற்றிடினு மதில்மூழ்கி
வித்தலத்தில் நல்லாவை வேதமுணர்ந் தோர்க் களித்தோர்
சுத்தமுறுங் கோவுலகிற் றுன்னியருட் கதிபெறுவார். 14

### 8. ஆதிசேடன் தீர்த்தம்

எழிற்சேடன் முன்கண்ட விருநான்காந் தீர்த்தத்திற்
பழுத்தபுகர் வாரத்திற் படிந்துசின கரத்தெய்தி
விழுப்பமுட னரனுமையாள் விழைந்திடமா விளக்கேற்று
மொழுக்கமுடை யவர்விடந்தீர்ந் துயர்பதத்தி லெய்துவரால். 15

### 9. அரித்துவச தீர்த்தம்

தெற்கிருபா ணக்கிடையிற் செழுந்தடங்கண் டதன்மேற்கி
லற்கலற வொருலிங்க மரித்துவே சரையப்பேர்
பொற்புளமன் ருபித்த புகன்றவொன்பான் றீர்த்தத்தில்
சிற்பரனைத் தியானித்துச் சென்றவா வினின்மூழ்கி. 16

பிதிர்கருமந் தற்பணங்கள் பிரியமுடன் செய்தளித்து
விதியிலரித் துவேசரையும் வியன்பெறவே தெரிசித்தோர்
இதமுறுநற் போகமெலா மெளிதினுற வநுபவித்துத்
திதமுளநன் முத்தியினைத் திருக்ககலப் பெற்றிருப்பார். 17

## 10. நாககன்னி தீர்த்தம்

நாற்றிசையுந் தோன்றவொரு தடங்கண்டு நாககன்னி
ஏற்றமுள வெழிற்பெரிய நாயகியா ரிருபதத்தை
சாற்றறிய வாசையினு லருச்சித்துத் தண்ணளியா
லூற்றமுடன் மிகுத்துவர வுதவினளப் புட்கரணி. 18

ஒருபத்தாந் தீர்த்தமதி லுயர்ந்தவிருச் சிகமதியி
னெருவற்ருர் புகர்வாரப் போதினிலே மூழ்கியுமைப்
பரிவுற்றே தெரிசித்தோர் பகர்சகல பாக்கியமு
மருவியே காந்தத்தின் மாற்கரிய கதியடைவார். 19

## 11. தருமசேன தீர்த்தம்

விரிவிலுறப் பூருவத்தின் மூன்றுவிற் கிடைதூரத்
தொருலிங்க நிறுவிமுன்னே யுயர்தரும புட்கரணி
மருவுபே ரைந்தாருந் தீர்த்தமென வயங்கு மந்தத்
தருமசே னன்பூசித் திருந்தவந்தத் தடந்தன்னில். 20

தைமாதம் பவுரணமை தானியைந்த வாரத்தின்
மைம்மாய மறமூழ்கி மகாதானம் வழங்குமவர்
ஐமாவே தியன்றன்னை யடுமறமா திகளன்று
கைமாவன் றுரித்தபிரான் கழலிணைபெற் றினிதிருப்பார். 21

இடபமதிப் பவுரணமை யெழிற்றினத்தி னத்தடத்தின்
மடமையற மூழ்கியெட்டுப் பணவிடைப்பொன் மகேசுரருக்
கிடமுறவீந் திடுகவல்லா திரண்டுபண விடையெனினும்
அடைவினிலீந் திடவல்லா ரவனிவலம் வந்தவராம். 22

### வேறு

## 12. மகாபிலக்கூப தீர்த்தம்

கூறறிய தீராருந் தீர்த்தமென வுற்றபிலக் கூப மொன்றுண்
டாறினையு மைந்தினையு நான்கினையு மட்டவுனக் கறைவோ
மென்ன
நீறுரிய கண்டிகைகள் நிலவுசனற் குமர னுயர் நேயமிக்குத்
தேறியடி பணிந்தருள்வா யெனவினவ நந்தீசர் செப்பு கின்ருர்.

அவனிதனின் மருவியயோ சனைக்கொன்றுண்
டரியபில வவையின் மேலாங்
கவரறுசங் கரநாரா யணங்காஞ்சி
செங்கோடு கமலைத் தேவி
தவமுயலு மருணகிரி விருத்தகிரி
தில்லையிணைச் சார்ந்தா ரேனும்
பவமகற்றுந் திருப்பனந்தா ளிவையினிலெம்
பிலமாகும் பவத்தை வென்றோய். 24

அதிகமவை களிற்காஞ்சி யம்பலஞ்சீர்த்
திருப்பனந்தா ளாகு மூன்று
விதமுறுமங் கவையிலொன்று மூலபிலந்
தாலவன மேவு மங்கார்ந்
திதமுதவக் கூபத்தின் பெருமையினை
யாவரறிந் திசைக்க வல்லார்
திதமதுணர்ந் தானுலு முணர்ந்தமரத்
திரஞ் சொல்வார் திகழக்கேட்டே. 25

பூரணையிற் சதுர்த்தசி மதிபருதி
கூடுதினம் பொருப்பு மாதும்
நாரமுற வரவழைத்த சத்திநதி
தனிலாடி நவிலு மூல
மாரங்கழ் பிலநோக்கி யமலைவிதி
யிபமகவா னரக்கி தென்பாற்
சாருமுனி மால்பருதி சசிசேடன்
சுமதிசிலன் தரும சேனன். 26

சங்குகன்னன் கொடிவசியன் யாவர்க்கும்
வரங்கொடுத்த சுயம்பு நாதன்
கங்கரன்தென் திருப்பனந்தாட் பதிவாழ
மகிழ்ந்துரையுங் கருணை மூர்த்தி
தங்குமிடந் தனிலேகித் தெரிசித்தோர்
புத்திமுத்தி சார்ந்திருப்பர்
புங்கமுற முக்காலுஞ் சத்தியமென்
ருனந்திப் புத்தே ளம்மா. 27

செஞ்சடைவே தியர்க்கிசா னத்திசையிற்
பொன்மயமாஞ் சிலம்பு மாது
தஞ்சமுற நிகழ்ந்திலகுஞ் சந்நிதிக்குப்
பூருவத்திற் றயங்கி மேலாய்
விஞ்சுபிலந் தெரிசித்துப் பூசுரரை
யருச்சித்து வெண்க லத்தெள்
ளெஞ்சலறத் தக்கணையோ டீந்தவர்கள்
சிவலோக மெய்து வாரால். 28

தநுமதியி லாதிரையிற் பவுரணமைத்
தினத்தி லயன் றடத்தின்மூழ்கித்
துனிவிலருங் காவிசந்த ஞதிகளாற்
ருண்டவே சுரரை யர்ச்சித்
தினியபா யசநிவே தித்துபய
நாயகனை யிறைவி தன்னை
நனியுறமா வலஞ்செய்து பிலத்தை முக்கால்
சூழ்ந்தோர்க்கு நரகமில்லை. 29

விளம்பியவத் தநுமதியி லொருமுப்ப
துளதினமும் விதிதீர்த் தத்தில்
யுளங்களித்து மூழ்கியர னைப்பணிந்து
பிலதீரத் துற்றைந் தாக
வளந்தருவண் ணஞ்செபித்தோர் சாரூப
மடைந்திருப்பர் மகிழ்ந்து கண்டோர்
அளந்திடுதற் கரிதான வாஜபே
யாகபல னடைவ ரன்றே. 30

தான்பிறந்த நாளதனின் சத்திநதி
தனின்மூழ்கித் தகும்பி லத்தை
ஆன்றுறக்கண் டவர்களிட்ட காமியங்க
ளடைவார்க ளைய மில்லை
வான்றகைந்த யாகபல முண்டுசிவ
புண்ணியந்தான் மருவுந் தானத்
தேன்றபல னெலாமுண்டு சிறுருண்டா
மிதன்பெருமை யுரைப்பா ரியாரே. 31

திகழ்கடைத்திங் களிற்பருதி தினத்தின்மல
ரயன்றடத்திற் சிறக்க மூழ்கி
யிகலிரவி தீர்த்தத்தின் மவுனமாத்
தான்படிந்தஞ் செழுத்து மோதித்
தகவரனை யருச்சித்துச் சூழ்ந்துபிலந்
தெரிசித்தோர் சட்ட கத்தில்
வகையிலுறும் பதினெட்டுக் குட்டநோ
யுற்றதெலா மாயு மன்றே. 32

ஆகையினு லப்பிலகூ பந்தனக்கொப்
புயர்வு மில்லை யலகைபட்சி
யேகரிய தாபரனுற் காலிமுதற்
கண்டுரே வியைந்த முத்தி
ஓகையிற்பெற் றிடுமின்னு லியான்கருதிப்
பெற்றபல மொன்றே யல்லச்
சேகரவே தந்தெரிந்த சனற்குமர
வென்றின்னஞ் செப்பு கின்றுன். 33

மூலபில கூபத்திற் செழுநீருட்
கொண்டோர்கள் மொழிந்த வந்த
நிலவரல் புரோட்சித்தோ ரவர்களெழிற்
றனையர்முதல் நினைத்த வெல்லாங்
கோலமுடன் பெற்றிருப்பர் தசும்புமுதற்
பாத்திரத்திற் கொண்டு மூழ்கி
மாலகல பரித்தயின்றோர் பரிமேத
யாகபலன் மருவு வாரே. 34

சத்திநதி முதலாகத் தக்கபில
மீருகச் சாற்று முன்னுன்
கொத்துயர்மா தீர்த்தத்திற் படிந்தோர்கள்
நீறக்க முவந்து சாத்தி
நித்தியம்பெற் றிடவருளு மஞ்செழுத்தை
விதிப்படியே நிலவ வோதி
யத்தரைச்சே வித்தல்பொது விதியாகக்
கொள்கவென வறைந்தா னென்றுன். 35



திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரர் ஆலயம்
உள்தோற்றம்



பஞ்சமூர்த்திகள் (பழங்கால ஓவியம்)









குங்குலியக்கலயர் சரித்திரம் கல்லில்
செதுக்கப்பட்டிருப்பது

என்றுரைத்த சூதரைப்பார்த் திருவிழிக
ணீர்பெருக வேத்தி நெஞ்சை
வென்றதவர் மேனிகழ்ந்த சரித்திரத்தை
யறைதியென்ன வெள்ளி வெற்பின்
அன்றுசனற் குமரனெழுந் தடிபணிந்து
நந்திநா யகவென் றன்பால்
நின்றபோ தமலன்முடி நிமிர்ந்தவழி
சயமுறைத்தா னிலவ வென்முன். 36

தீர்த்தச் சருக்கம் முற்றிற்று

## பதினெட்டாவது குங்கிலியக்கலையநாயனர் சருக்கம்

தன்னிகரிற் றிருப்பனந்தாட் டலத்துமையாள் வடிவமெனு
முன்னுன்கு தீர்த்தத்தின் மான்மியங்கள் மொழிந்ததற்பின்
முன்னுளிற் ருடகைக்கா முடிவளைய வதுநிமிர்ப்பான்
நன்னுமக் கலயரருச் சித்தகதை நவிலலுற்றும். 1

முரணரசர் கிடந்துறங்கி மூச்செறியுந் திருவாயி
லிருநிலங்காத் தினிதளிக்கு மெழிற்பெரிய தனிச்செங்கோல்
வரியுமுவை மேருவின்கட் பொறித்துவைத்து வயம்படைத்த
தருமநெறி வழாவீர சயனென்னு மநுவேந்தன். 2

பன்னரும்பொன் மணியணிக ளாதியெலாம் பாராளு
மன்னவர்கள் நனியளித்து வணங்கிவர வமைச்சர்முதல்
துன்னியநாற் படைசூழத் துகள்போய்ப்பா நுவைச்சூழப்
பொன்னிநீர் முதற்றீர்த்த யாத்திரையிற் புறப்பட்டான். 3

இடையிலுள தீர்த்தங்க ளெழின்மூர்த்தி தனிவடிவ
மடமையறக் கண்டுகங்கை வார்புனலிற் படிந்தளித்துப்
படியகன்ற வபிமுகத்தி சரைப்பணிந்து பலதானம்
புடவிவல மாய்க்கண்டு பொன்முகரி தனின்மூழ்கி. 4

அங்ககன்று வேதவன மரியவிரா மேச்சுரத்திற்
றங்கிமது ராபுரியோ டானைக்கா வினிற் சார்ந்து
துங்கமிகு மையாறு சுவாமிமலை குடமூக்குப்
பங்கமக லிடைமருதூர்ப் பணிந்துபன சையிற்சார்ந்தான். 5

சார்ந்தவரு டத்திருநாட் டக்கமா தத்திருநாள்
வார்ந்துறுநித் தியத் திருநாள் வயங்கிநிகழ் மணிமறுகிற்
சேர்ந்துபிர தக்கணமாய்த் திசைமுகன்றன் றடமாடி
யார்ந்தநீ றக்கமணிந் தஞ்செழுத்து மறைந்தனனல். 6

**வேறு**

கொண்டல்வளர் கோபுரத் துள்புகுந்து
கோடீர முடிப்பர மன்னடியிற்
றண்டென்ன விழுந்து புரண்டுரைகள்
தடுமாற வரக்கன லுற்றதெனக்
கொண்டுண்மன நெக்கவிழிப் புனல்கள்
குன்றத்தரு வித்திரள் போலிழிய
அண்டர்க்கரி தாகிய நாயகவுன்
னருமைச்சிர மென்கொல் வளைந்ததுவே. 7

என்றுற்றுரை யாடியலக் கணினின்
றென்னுயக நாயடி யேனுலகங்
குன்றக்கொடு மைத்திற முள்கிமிருங்
கோடீரம் வளைத்தனை யோவறியோம்
குன்றத்தனை துரிசுகள் செய்திடினுங்
கோவேபிழை யாவையுங் குன்றவருள்
வென்றிப்படை யாய்மழு வாளுடனே
விளங்கும்பன சைப்பதி வித்தகனே. 8

ஒருவர்க்கிடை யூறது செய்தறியே
னுயரென்குல முற்றவ ரிற்சிலபேர்
மருவிச்சிதை கன்று தனக்கரிய
மைந்தன்றனை யாழி யுழைக்கணிறப்
புரிவித்தனர் மற்றவர் தன்சதையை
புறவுக்கிணை யாக வரிந்துவன
சரனுக்கரு ளோடு மளித்தனர்யான்
சகமாளுத னன்றென மாழ்கினனே. 9

கருணைக்கடல் செஞ்சடை நாதர்முலைக்
கண்ணுற்றிட வன்றுமை மின்றழுவப்
புரமுற்று மிளைந்து குழைந்தவரைம்
பொறிமற்றுள பற்றுள மெய்யடியார்

ஒருமைக்கருள் செய்பவர் நஞ்சிவனென்
றோர்ந்துண் ணவை யுள்ள முருதிவனுன்
மருவப்புரி நேர்பெற நிற்கவென
மாலன்பின் வணங்கி வழுத்தினனே. 10

அந்நேரமும் யானயி லேனெனவே
யகமார்விர தத்தொடு பட்டிழைதந்
தின்னேகோணர் வீரென வல்வினைஞ
ரிசையக்கடி திற்றர வேயுமதைத்
தன்னேர்வட மென்ன முறுக்கியரன்
தகுசென்னியின் மைந்துட னேதளைசெய்
தின்னேபர மன்னிமி ரக்கடிதின்
னிழுமின்னென யாரு மிழுத்தனரால். 11

### வேறு

இத்தகை முழக்கத் தோடும் யானையுஞ் சேனை பூண்டு
மொய்த்துற வடம் பிடித்து மொய்ம்புற விழுக்க வேந்தன்
எய்த்தனன் நேர்நில் லாமை யெம்பிரா னிருக்கக் கண்டு
வைத்தன னுர்வம்பொங்கி மன்னனும் வழுத்த லுற்றுன். 12

வேறுவே ருயெல் லோரும் விரைந்துதாம் வழிபட் டேத்தக்
கூறுகூ ருயெல் லோரும் குணலைபிட் டரற்று வார்கள்
ஆறுமா ருகி நின்ற சமயங்க ளாகி வேளை
நீறுநீ ருகச் செய்தாய் நிமிர்ந்திட வேண்டு மென்றுர். 13

இடையிடை மன்னர்சேனு பதிகடா மிடையி னீங்கா
திடையிடை தண்ட லாள ரிகற்றிற லமைச்சர் மற்றோர்
இடைஇடை நின்றே யுய்க்க வெரிசுழல் காற்றுப் போல
இடையிடை புகுந்து வேந்த னியங்கியே தியங்கு நாளில். 14

மறையவர் மகங்க ளுய்ப்பார் மன்னரல் லவைக ளுய்ப்பார்
பிறையன நுதலார் கற்பே பெரிதுற நிலவும் பொற்பே
யுறைகுடி யறமே தேடும் முலுத்தமென் பதனை வீடும்
பொறிதிருக் கடவூர் மேலார் புகழ்திருக் கடவூர் மேலார். 15

ஆயிடை மருவி வாழும் அந்தணர் கலயனூர் தாம்
மேயவிற் கிழத்தி துன்புற் றிலம்பாடு மிகவாற் றாலி
நேயமிக் களிக்க வாங்கி நேர்ந்தகுற் குலுகொண் டேத்தத்
தாயர னருளாற் செல்வந் தனபதி யளிக்கப் பெற்றார். 16

இந்துசே கரனுக் கன்ப ரினியகுங் கிலியத் தூப
மந்தமுற் றிழைத்தில் வாழ்க்கை யறத்தினின் றியலு நாளின்
முந்தையார் பனசை நாதர் முடியினால் வடங்கள் பூட்டிக்
கந்துக முதல்கொண் டீர்த்தான் காவல னென்று கேட்டார். 17

இவ்வதி சயத்தைக் கேளா விறையவர் வீரட் டேசர்
திவ்விய வருள்பெற் றூர்ந்த திருக்கட வூரி னின்று
பவ்வநே ரான வாறும் பதிகளுங் கடந்து மாவின்
கவ்வையம் பண்ணை சூழ்ந்த கவின்திருப் பனந்தாள் கண்டார்.

கண்டுகை கூப்பி யிப்பாற் கடிதினிற் படருங் காலை
அண்டகோ ளகை யனக்கு மரிய பொற் கோபுரத்தை
மண்டுபே ரன்பாற் றாழ்ந்து வணங்கியுள் புகுந்து தூபி
விண்டனை யளக்கு மூன்று மிளிர்தலை விமானங் கண்டார். 19

வேறு

வந்து கண்டனர் வளவனெம் பரன்முடி மீது
பந்த முற்றிடப் பட்டுநூல் வடங்களைப் பூட்டி
தந்தி யாதியா விழுத்திடத் தருக்கியே புரிந்தா
னுந்தி டுந்திரு மேனிதா னுட்பவென் றழுதார். 20

மெய்ந்ந டுங்கிடப் பொறியெலாங் கலங்கிட விடயப்
பொய்க ணுங்கிட நாற்கர ணங்களும் புலர
மைதரும் பெரு மருளெலா மகன்றிட வலறிச்
செய்வ தென்னென திசைதடு மாறியே நின்று. 21

அன்பு ருக்கொடு வந்ததென் றணைவரு மறைய
வன்மை யட்டுயர் கலயனார் வள்ளலை நோக்கி
நன்பொ ருப்பினுள் நகிலுறப் பொருதுமுன் குழைந்த
இன்ப ரூபமே யெந்தையே யென்றின மொழிவார். 22

### வேறு

மநுமுறைகோ லோச்சாது வண்டிகிரி
நடத்தாது மருவு மாவி
துனியுறச்செய் மன்னவனை யடியவரை
யிகழ்ந்தவரைச் சுரபி தன்னைக்
கனிவினுடன் புரவாரைப் பயிக்கமிடாப்
பாதகரைக் கடும்பா வத்தி
னினியரைப்பார்க் கரிதென்றுள் ளத்துனியோ
வமலவிவ்வா றிருப்ப தென்றார். 23

மருவருநின் றலைகுனிந்தாற் பாகசா
தனனிருண்ட படிவத் தண்ணல்
கரவிலிமை யவர்களெலாங் களமதனி
லிருந்தவிடங் கவிழு மியாமுந்
தெருளிலிறந் திடுவமெனத் திகையாரோ
கங்கைநீர் சிந்தி விட்டாற்
பொருவின்மூ வுலகமெலா முகாந்தமாய்ப்
போகாதோ புனித வென்றார். 24

வண்டுமுசெஞ் சடையவனி வளைந்திடிலன்
பர்கள்சூழ வளைந்து பார்த்துக்
கண்டனரே லென்படுவா ரமலநீ
யோகியைந்தாற் கதித்த யோகங்
கொண்டிருப்பார் போகமுற்றாற் போகியா
யிருந்திடுவார் குலாவி யாடிற்
றண்டகமன் பதையாடுஞ் சாய்ந்தக்கா
லெவ்வுலகுஞ் சாய்ந்தி டாதோ. 25

### வேறு

என்று வேண்டிய வன்பர்தஞ் செயலெலா மொருவன்
சென்று மன்னனை வணங்கியோர் செழுமறை யன்பர்
நின்று போற்றின ரென்றன னேரியன் விரைந்து
நின்ற வன்பினர் திருவடி வணங்கிநேர் நின்றான். 29

பரவ சத்தினில் நின்றவர் மகிபனைப் பார்த்தே
யுரை யுணர்வினுக் கெட்டொணு வொருவனை யன்பா
முரன்க யிற்றினு னிமிர்த்திட வுன்னுவ தன்றி
புரக ரன்றிரு முடியினிற் கயிறது பூட்டி. 27

உன்பெ லத்தினுற் சேனைக ளெய்ப்புற வுலவா
வன்பு துற்றுற விழுத்தனை மன்னநாள் பலவா
என்பு டைக்கணேர் முகூர்த்தம்விட் டிதனையு நோக்கென்
றன்ப ரன்பினு லுரைத்திட வரசனு நேர்ந்தான். 28

அண்டர் நாயக னருட்டிரு மேனியை வருடிக்
கொண்டு மெய்ம்மிக நொந்தன வோவுமை கூற்றின்
மண்டி யுற்றிட மலைந்துநின் றறவும்வா டினளோ
வண்டு லாஞ்சடை வள்ளலே யெனமிக வழுதார். 29

தேவ நின்முடி வளைந்திடிற் றிங்களம் பருதி
மாவ மூற்கணுஞ் சாயுமே சாய்ந்திடில் வயங்கும்
பூவு லோகமும் பொன்றுமே பொன்றிடி லமரர்
கோவ லான்முத லமரர்கள் குலைவரென் றுரைத்தார். 30

வேறு

உரைத்ததாற் பயனென் புராரியிக் கணமே
யுலகெலா முய்ந்திட விரங்கிப்
பொருக்கென நிமிர்தி யெனவவ னிருதாட்
பொற்கம லந்தலைக் கணிந்து
வரைக்கரு மன்பா மரியபூங் கச்சை
வள்ளலார் முடியினிற் பூட்டி
தரித்திடுந் திகிரி தன்கழுத் திட்டு
தாணுவே நிமிரென விழுத்தார். 31

விரைந்தினி திழுக்கச் சோரிவாய் களத்து
மேவிட வரிந்தது திகிரி
வரந்தரு முமையாள் வள்ளலை நோக்கி
மகேசவிவ் வன்பரைக் காவென்
றுரந்தக வுரைக்க வூட்டிமட் டளவு
முற்றிலை யெனமிகு கருணைப்
புராந்தகன் கரத்தா லன்பரைப் புரந்து
பொருக்கெனத் தானுமே நிமிர்ந்தான். 32

அடற்றிற லமரர் பூமழை பொழிந்தா
ரரவெனு மோசைவிண் ணடைந்த
மிடற்றினி லூருஞ் சோரியு நீங்கி
மெய்ம்மையா மன்புரு வாகிக்
குடத்துறு தீபங் குன்றிலிட் டென்னக்
குலவிய வன்பரைப் போற்றித்
தடக்கைமன் னவனுந் தன்குறை நீங்கித்
தரைமிசைத் தாழ்ந்தடி பணிந்தான். 33

பொன்னுல காளும் புரந்தரன் றிருமால்
பூமிசை யிருந்தவே தியனுந்
தன்னதென் றுளும் பதங்களை யனுவாத்
தள்ளுவார் பரமனுக் கன்பர்
என்னினு மிவருக் கேதுப சார
மியற்றுவோ மென்றுநெக் குருகிப்
பொன்னடித் தலங்கள் மிசையினின் மீட்டும்
பணிந்தனன் புரவலன் மாதோ. 34

பச்சிமத் திருநா ழிகையிடத் தயிரா
பதப்பெயர் பெற்றதீர்த் தத்தி
னச்சியங் கணுகி யூழ்கியப் பெயரால்
நாதனைத் தாபித்து வணங்கி
யிச்சட மகலு நாள்வரைப் பூசை
யியற்றென வாணியா லிசைக்க
அச்சமுற் றடைந்தவ் வணம்புரிந் தறுபா
னடுத்தமூன் றியாண்டுமன் னிருந்தான். 35

இருந்தவன் காயந் துறந்தபின் பொருவி
லிறைவனுய் வந்தவ தரித்துப்
பொருந்துபூ ருவத்தி லறிவுறப் பனசைப்
பொற்பதி யடைந்தரும் பணிகள்
பரந்துயர் மேட விழாமுத லியற்றிப்
பதாதியோ டங்கிருந் திறந்து
தெருண்டவிப் பிரனுய் பிறந்தவ ணடைந்து
சின்மயம் பெற்றுவீ டடைந்தான். 36

நினைவருங் கலைய ஞர்தம்
　　நிகழ்ச்சிமற் றுளதுஞ் சொல்வா
மனமிகத் தெரிந்து பத்தி
　　வகையிலெட் டுணையு மில்லேன்
றனையொரு பொருளா யெண்ணித்
　　தடுத்தினி தாண்டு கொண்ட
வனகநற் பனசை மேய
　　வம்பிகா பதியே போற்றி. 37

பொருவினீ யருளப் பெற்றேன்
　　பொன்முடி நிமிர்க்கப் பெற்றேன்
திருமலர்க் கரத்தை நீட்டிச்
　　சென்னியில் வைக்கப் பெற்றேன்
கருதிநின் றுமையா ளன்னை
　　கருணையா லுரைக்கப் பெற்றேன்
அரசனுந் தரணி யோடு
　　மடியேனு முய்யப் பெற்றேன். 38

என்றுரைத் திரைஞ்சி யந்த
　　விறைவன தருளைப் பெற்று
வென்றியா வுடையார் சாத்த
　　வேண்டுமென் றளவு கொண்டு
கொன்றைசேர் சடையி னன்றன்
　　கொய்மல ரடியிற் றாழ்ந்து
பொன்றிகழ் சிலையைத் தேடப்
　　புறப்பட வெண்ணு கின்றார். 39

### வேறு

பரிதிநெறி யடைத்துயர்ந்த திருப்பனசைப்
　　பதியதனிற் பாலன்றேவி
மருவியிடத் தான்சென்று மலைவளர்கெண்
　　டகச்சிலையை அளவாற் செய்து
பொருவரிய பனந்தாளிற் கொணர்ந்துபர
　　மனுக்கணியப் புக்க போது
திருவுடையார் திருமேனி முன்னையினும்
　　பெரிதாகத் திகழக் கண்டார். 40

கண்டுமிகத் தளர்வெய்தி மனங்கலங்கி
யிப்பணியைக் கருணை மூர்த்தி
கொண்டிலையே லுயிர்துறப்ப னென்றகத்திற்
குறித்தவுட னெக்கிக் கொண்டார்
திண்டிறல்மா மறைமுனிவர் மனங்களித்துப்
பூசையெலாஞ் சிறப்பச் செய்து
மண்டியபே ரன்புமிக வழிபட்டு
மாமணையின் மன்னினரே. 41

வேறு

இவர்செய லிவ்வாறாக விதற்குமுன் னிவர்தம் பாலன்
தவவுல கதனிற் சார தைலத்திற் சவத்தை யிட்டு
பவமக லாயுள் வேதப் பண்பினு லமைத்து வைத்து
தவவடி வுடைய கேள்வர் வரவினைத் தையல் பார்த்தாள். 42

தம்பெருங் கணவ னுக்குத் தக்கவா றுபச ரித்துப்
பைம்பொனு ணரையின் மின்னும் பாலகன் பரிசு ணர்த்தத்
தம்பெரு மானுர் செய்த தன்மையை யுளத்தி லாய்ந்து
நம்பரன் றனிமுன் னேய்ந்த நாககன் னிகைதீர்த் தத்தில். 43

சென்றுதோய்த் திளஞ்சேய் தன்னைத் தேவதேவன்முன் வைத்து
நன்றும தருளென் றுன்னி நாதனை வலஞ்செய் போழ்தில்
பொன்றிய மகனெழுந்து பூசுரன் றனை வணங்க
சென்றுதம் மனையா ளோடுஞ் செஞ்சடை நாதன் றன்னை. 44

பன்முறை வலங்கொண் டேத்திப் பராபர னருளி னுலே
பொன்மனை யினியபோகம் பொன்றலில் முத்தி யென்னும்
சின்மய மான வீடுந் திருவரு ளதனுற் பெற்று
நன்மைசேர் கடவு ரென்னு நற்பதி நண்ணி னுரால். 45

வேறு

குலவவி துணர்தியருண் மெய்ஞ்ஞானம்
பெற்றசனற் குமர வென்னச்
சிலையருவி யெனவிழிநீர் பெருகவுரோ
மஞ்சிலிர்ப்பத் தெண்டுமான

மலரடியிற் ருழ்ந்துதிருப் பனந்தாளின்
　　மான்மியங்கேட் டுய்ந்தே னென்ன
சலசமல ரனையமுகத் தவச்சூத
　　ருமுனிவன் சாற்றினனே. 46

பொன்னலர்தா மரைவாவி புடைசூழு
　　மெழிற்பனசைப் புராணந் தன்னை
சொன்னவர்கற் றவர்கேட்டோர் பொருள்விரித்தோர்
　　வியந்துசிரந் துளக்கி னோர்கள்
மன்னிவள ரீரெட்டா வளர்போக
　　மெலாந்துய்த்து மகாதே வன்றன்
பொன்னடியா னகலாத மெய்ஞ்ஞான
　　போகத்திற் பொருந்து வாரே. 47

வேதம் வாழ்கவெண் ணீறு விளங்குக
நீதி யாஞ்சிவ நன்னெறி நீடுக
மாத மும்மழை மன்னுக மன்னவன்
கோத கன்றநன் னீதி குலாவுக. 48

குங்கிலியக்கலய நாயனர் சருக்கம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் 599.

திருப்பனந்தாள் தலபுராணம் முற்றுப்பெற்றது.

## ஆக்கியோன்

தாரணியி லுளசகல சாத்திரமுங்
 கெடாதுலகிற் றங்கும் வண்ணம்
காரணியே டளித்துவளர் கவின்பனசைப்
 புராணத்தைக் கணித்த மேலோன்
ஆரணியுஞ் சடையப்ப னூர்கயிலைப்
 பரம்பரையி னருள்சேர் நந்தி
சீரணியு மருள்பெற்ற செஞ்சடைவே
 திய நாமத் தேசிகேந்திரன்.

உ

சிவமயம்

# செய்யுட்களின் முதற்குறிப்பகராதி

# அரும்பத முதலியவற்றின் அகராதி

[சருக்க எண் — பாட்டு எண்]

கிடைக்குமிடம்:—

தருமபுர ஆதின
**நூல்நிலையப் பரிசோதகர்,**
தருமபுரம், மாயவரம் P. O.

**காப்பார்,**
**ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானம்,**
திருப்பனந்தாள்
(Via) கும்பகோணம்.

வேண்டுவோர் விலை ரூ. 0–8–0 தபாற் கூலி ரூ. 0–1–9 ஆக ரூ. 0–9–9ம் முன்னர் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.